Regd. No. 2975 ஃ

# ஸ்ரீ ராமாநுஜன் - 345

ஆசிரியர்: P. B. அண்ணங்கராசார்யர்.

# SRI RAMANUJAN



Editor:

*Mahamahimopadhyaya*

P. B. ANNANGARACHARYA, KANCHIPURAM-631503.

வருஷச் சந்தா 10 ரூ. * [illegible] சந்தா ரூ. 25



[illegible]ருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்.



ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.








ஆழ்வார்கள் வாழி அருளிச்செயல் வாழி*
தாழ்வாது மில்குரவர் தாம்வாழி—ஏழ்பாரு
முய்ய வவர்க ளுரைத்தவைகள் தாம்வாழி*
செய்யமறை தன்னுடனே சேர்ந்து.

நளஹு 10-3-1977.

ஸ்ரீ:

திருவல்லிக்கேணி உடையவர் கைங்கர்ய ஸபையாருடைய

# ஓர் முக்கிய வேண்டுகோள்

அடுத்த பிங்களவருடத்து எம்பெருமானுர் உத்ஸவத்தை முன்னிட்டு நல்ல முறையில் திருவல்லிக்கேணி ஸ்ரீ உடையவர் சபையால் வெளியிடப்போகும் மலரில் (1) இரண்டு அல்லது மூன்று கட்டுரைகளும், அனேக திவ்யதேச படங்களும், (2) கத்யத்ரயம் தாடீபஞ்சகம், ஸ்ரீராமானுஜ அஷ்டகம், அஷ்டோத்தரம், ப்ரார்த்தனு பஞ்சகம், ராமானுஜ சதுச்ச்லோகி, ஸுப்ரபாதம், ப்ரபத்தி, ஸ்ரீபெரும்பூதூர், திருவல்லிக்கேணி திருமஞ்சன மங்களாசாஸன கட்டியங்கள், எத்ஸரிகைகள், யதிராஜ விம்சதி, எதிராஜ ஸப்ததி, இராமானுச நூற்றந்தாதி முதலியனவும். (3) ஸ்வாமியின் ஒன்பது க்ரந்தங்களின் சுருக்கம் முதலியனவும் வெளிவரும்.

இது ஒவ்வொரு ஸ்ரீவைஷ்ணவர்களின் க்ருஹங்களிலும் அவசியம் இருக்க வேண்டியதாக அமையும் ரூ. 10/- ப்ரத்யேகமாக அளிப்பவர்களுக்கு ஒரு மலர் அளிக்கப்படும். இதற்கான பணத்தை கார்யதரிசி, ஸ்ரீ உடையவர் கைங்கர்ய சபை, 33, தேரடித் தெரு, திருவல்லிக்கேணி மதறாஸ்-5 என்ற விலாசத்திற்கு முன்னதாக நேராகவோ M. O. மூலமோ பதிவு செய்துகொள்ள வேண்டுகிறோம்.

961-வது அவதார உத்ஸவ கமிட்டியார்
ஸ்ரீ உடையவர் கைங்கர்ய சபை.
[உயர்திரு. N. கிருஷ்ணஸ்வாமி ரெட்டியாரவர்கள்
தலைவர்.]

---

# பத்ராதிபு விஜ்ஞாபனம் (P. B. A.)

28—2—77 இன்று எம்பெருமானுர் திருநக்ஷத்திரம் திருவாதிரை. இன்று தோன்றிய ஒரு மனோரதத்தை ஆனந்தமாக விஜ்ஞாபிக்கிறேன். பிங்களவத்ஸர மங்களமாலிகைகள் பல வெளிவந்திருக்கின்றன; பிங்களவத்ஸர பூர்த்திவரையில் மேலும் வெளிவந்துகொண்டிருக்கும். எம்பெருமானுர் திருவவதரித்து 960 திருநக்ஷத்ரங்கள் கடந்தமையால் இதற்கு ஞாபக சின்னமாக 960 அர்த்தங்கள் கொண்ட ஒரு மலர் ஆனித் திருவாதிரைக்குள் வெளியிடப்படும். எம்பெருமானுர் தரிசனக்ஷேத்திரத்தில் ஸுபிக்ஷமாக விளைந்துள்ள பரஸ்ஸஹஸ்ர அர்த்த விசேஷங்களுள் ச்ருதிதிஹாஸபுராண உபய வேதாந்த ரஹஸ்யார்த்த விசேஷங்கள் 960 வெளிவரும். விவாதாஸ்பத விஷயங்கள் இதில் லவலேசமும் புகமாட்டா. உத்தரதேசீய ஸ்ரீவைஷ்ணவர்களுக்கும் ஆந்திரப்ரதேச ஸ்ரீவைஷ்ணவர்களுக்கும் உதவியாக வடமொழியிலும் வடுகு மொழியிலுங்கூட இதேபோல் வெளிவரும். பகவத்பாகவதக்ருபாகடாக்ஷத்தைப் பிரார்த்தித்து நிற்கிறேன்.

P. B. A. தாஸன். 1—3—77.

# ஸ்ரீ ராமாநுஜன்—345



ஆசிரியர்:
மஹாமஹிமோபாத்யாய ஸ்ரீகாஞ்சி ப்ரதிவாதிபயங்கரம்
அண்ணங்கராசாரியர்

ஸம்புடம் 29 | நளவருஷ மாசி மாதம் மார்ச்சு, 1977 | ஸஞ்சிகை 9


# சில பெரியார்களின் திருவுள்ளம்.

ஸமீபித்திருக்கும் பிங்களவாண்டு எம்பெருமானாருடைய திருவவதார ஸம்வத்ஸரமென்றுகொண்டு செய்யும் கிரிசைகள் எம்பெருமானாரொருவரோடு நிற்கக் கூடாதென்றும், எம்பெருமானார் தரிசனத்தைச் சேர்ந்த ஸகலாசாரியர்களுக்கும் பெருமை எம்பெருமானாராலே யாதலால் அவ்வவருடைய முகமலர்த்திக்கு உத்தேசித்து ஸ்ரீவைஷ்ணவாசாரியர்கள் பலருடையவும் திவ்யக்ரந்தங்களை எம்பெருமானார் க்ரந்தங்களாகவே மதித்து அவற்றுக்கும் புநருத்தாரம் செய்யும் பணியை மேற்கொள்ளவேணுமென்றும் சில பெரியார்கள் அன்புடன் தெரிவிக்கிறார்கள். கூடவே மற்றொன்றும் தெரிவிக்கிறார்கள்—இதுகாறும் இப்பணியை மேற்கொண்டு செய்துவருபவர்கள்தான் எதையும் செய்யவேண்டும்: புதிதாக யார் செய்ய முன்வரப்போகிறார்கள்? என்று. பலரும் முன்வரவேணுமென்பது அடியேனுடைய பிரார்த்தனை. வாதிகேஸரி அழகிய மணவாளச் சீயர் அருளிச்செய்த தத்வதீப தீபப்ரகாசங்கள் மிகச்சிறந்த நூல். 75 வருஷங்களுக்குமுன் தெலுங்குலிபியில் அச்சிடப்பட்ட இந்த க்ரந்தம் 40, 50 ஆண்டுகளாகவே துர்லபமாயிற்று. இப்பெயருடைய க்ரந்தமுள்ளதென்றுகூட அனேகர் அறியார்கள். தத்வதீபமென்பது வடமொழி. அதற்கு மொழிபெயர்ப்பாக (மணிப்ரவாளத்தில்) அவர்தாமே அமைத்தது தீபப்ரகாசமென்பது. இதனை அச்சிடத் தொடங்குவோம். இவர் தாமே ரஹஸ்யத்ரயகாரிகாவளீ என்னும் க்ரந்தமும் (ஸரளச்லோகரூபம்) அருளிச்செய்திருக்கிறார். 63 வருஷங்களுக்குமுன் இதை அடியேன் தெலுங்குலிபியில் அச்சிட்டேன். இதுவும் 50 வருஷமாக துர்லபம். "மநோரதாநாம் அதட: ப்ரவாஹ:" ... •

 

# திருக்கச்சிநம்பிகளநுபவம்



நமக்கு ஒவ்வொருமாதமும் ஒவ்வொருகாரண விசேஷத்தினால் உத்தேச்யமாகிறது. ஆழ்வார்களும் ஆசாரியர்களுமன்றோ நமக்கு முக்கியமாக உத்தேச்யர்களாகின்றார்கள். ஆழ்வார்களில் ஒருவரும் அவதரியாத மாதங்கள் சில இருந்தாலும் ஆசாரியர்கள் அவதரியாத மாதம் ஒன்றுகூட காணக்கிடைக்காது. ஆழ்வாருடையவும் ஆசாரியருடையவும் திருவவதாரத்தினால் புனிதமான மாதங்களும் பலவுண்டே. ஆழ்வார்களில் குலசேகராழ்வாருடையவும், ஆசாரியர்களில் திருக்கச்சிநம்பியுடையவும் திருவவதாரத்தினால் புனிதமானது மாசிமாதம்.

ஒரு ஆச்சரியத்தை முன்னம் தெரிவிக்க விருப்புகிறேன். இன்று 22–2–77 காலை நித்யக்ருத்யங்களை நிறைவேற்றிக்கொண்டு என்னுடைய கார்யாலயத்தில் அமர்ந்து இன்று, முந்துறமுன்னம் மிருகசீர்ஷத்திலவதரித்த திருக்கச்சிநம்பியைப் பற்றி ஒருகட்டுரை எழுதவேண்டுமென்று ஸங்கல்பங்கொண்டு எழுதத்தொடங்கி மகுடமிட்டவுடனே [8 மணிக்கு] தபால்கள் வழக்கப்படி வந்து சேர்ந்தன. அவற்றுள் முதல் கடிதத்தைப் பிரித்தவுடனே "இப்போது தேவரீர் திருக்கச்சிநம்பிகளின் திவ்ய குணாநுபவத்திலே அமர்ந்திருக்கக்கூடுமென்று உட்கண்ணால் காண்கிறேன்" என்பதை அதில் முதல்வாக்கியமாகக் கண்டேன். அந்த மஹாநுடைய திருநாமம் இங்கு ப்ரஸ்தாவிக்கவேணுமோ? அவர்க்கு உடனே நான் பதில் எழுதினேன்—தேவரீர் உட்கண்ணால் கண்டதன்று; கட்கண்ணாலேயே கண்டறிந்து எழுதியதுதான் என்பதில் என்மனம் ஐயுறவில்லை" என்று "ஆச்சர்யாதி ஹ்ருதயம் ஹ்ருதா" என்கிற ஸ்ரீராமாயணவசனத்தையும் அவர்க்கு நினைவூட்டினேன்.

இதிலிருந்து ஒரு சிறு கதை நினைவுக்கு வந்தது. பரம வைதிகரான ஒரு ஸ்வாமி ஒருநாள் காலை யெழுந்து தம்முடைய வயலுக்குச் சென்றார்: அங்கே உழவர்களோடு ஒரு விவாதம் விளைந்ததிவர்க்கு. மேலதிகாரிகளுக்குச் செய்தி சொல்லியனுப்பிவிட்டு இவர் திருமாளிகைக்கு வந்து நீராடி அனுட்டானங்களை முடித்துக்கொண்டு பெருமாள் திருவாராதனத்திலமர்ந்தார். ஆனாலும் இவர்க்குத் திருவாராதனத்தில் நெஞ்சு செல்லவில்லை. வயல்வழக்கிலேயே நெஞ்சு ஊன்றி நிற்கிறார். இந்த நிலைமையில் வயற்காட்டிலிருந்து தோட்டியும் தலையாரியும் வந்து வாசலில் நிற்கிற மருமகளை நோக்கி 'அய்யா எங்கே?' என்று கேட்க, ஏதுக்காகக் கேட்கிறாய்? என்ன, 'உடனே அய்யாவை வயலுக்கு அழைத்துச் செல்லவேண்டியிருக்கிறது' என்ன, அதற்கு மருமகள் 'அய்யா அங்கேதான் சென்றிருக்கிறார்' என்ன, திருவாராதன அறையில் நிற்கிற அய்யா இதைக் கேட்டு மிக வியப்புற்றார்; தாம் உள்ளேயிருக்கிற விஷயம் மருமகளுக்கு நன்றாகத் தெரிந்திருந்தும் அந்தப் பெண் அப்படிச் சொன்னதற்கு வியப்படைந்தார். நம் உடல் இங்கிருந்தாலும் நம்முள்ளமெல்லாம் வயற்காட்டில் சென்றிருக்கிறதென்பதையறிந்தே இந்தப் பெண் இங்ஙனே சொல்லிற்று என்று தெரிந்துகொண்ட அவர் தேவியாரை விளித்து 'அடி! இந்தப் பெண்ணுக்கு நீ என்ன உணவு இடுகிறாய்? உள்ளபடி சொல்லு' என்ன; 'உளுத்தம்பருப்புத் துகையல் என்று சொல்லி பசுஞ் சாணியையிடுவேன்' 'இந்தா தீர்த்தமென்று சொல்லி கோமயத்தைக் கொடுப்

பேன்' என்று சொல்லத் தொடங்கி 'அதையெல்லாம் அந்தப் பெண் முகக்கடுப் பில்லாமலே நின்றுவிடும்' என்றுரைத்து முடித்தாள். 'அந்த கவ்யத்தின் ப்ரபாவமேயிது' என்று தெரிந்துகொண்டாராம். ப்ராஸங்கிகமானவிது நிற்க.

இனித் திருக்கச்சிநம்பியநுபவம் தொடங்குகிறேன். பெரிய பெரிய க்ரந்தங்களை யருளிச்செய்தவர்களுக்கும், உபயவேதாந்த ப்ரவசனங்களை விசேஷமாகச் செய்தவர்களென்று ப்ரஸித்தி பெற்றவர்களுக்குங்கூட இல்லாத பெருமையை நம்பிகளிடம் காண்கிறோம், இவர் தமக்கும் ஆசார்யரான ஆளவந்தாரிக்கும் ஸ்ரீமந் நாதமுனிகளுக்கும் விக்ரஹ ப்ரதிஷ்டையில்லாத கோவில்களிலுங் கூட நம்பிகளுக்கு அர்ச்சையையும் உத்ஸவோபலாலனங்களையும் காண்கிறோம். எம்பெருமானாருடைய பஞ்சாசாரியர்களில் இவரையு மொருவராகச் சிலர் கூறுவதுண்டு; அப்படியில்லை. இவரைத் தவிர்த்தே ஆசாரியர்கள் ஐவர் பரிகணிதர்களாயிராநின்றுர்கள். "ராமாநுஜமுநேர் மாந்யம்" என்னும்படியான பெருமையே இவர்க்குள்ளது. மாந்யம் என்கிற இச்சொல் உண்டே. இது அநர்க்கமானது. அது நிற்க.

மணவாளமாமுனிகள் அருளிச்செய்த தேவராஜ மங்களத்தில் "ஸ்ரீ காஞ்சிபூர்ணமிச்ரேண ப்ரீத்யா ஸர்வாபிபாஷிணே, அதீதார்ச்சாவ்யவஸ்தாய ஹஸ்தியத்ரீசாய மங்களம்" என்கிற சுலோகத்திலும் குருபரம்பராப்ரபாவாதிக்ரந்த விசேஷங்களாலும் தேவப்பெருமாள் அர்ச்சாவதார ஸமாதியைக் கடந்து நம்பிகளோடே வார்த்தையாடினவரென்பது நிஸ்ஸந்தேஹமாக அறியப்படுகின்றது. "திருக்கச்சிநம்பியாறு வார்த்தைகள்" என்று ப்ரஸித்தமாகவுமுள்ளது. "அஹமேவ பரம் தத்வம் தர்சநம் பேத ஏவ ச, மோக்ஷோபாய: ப்ரபத்திஸ் ஸ்யாத் பூர்ணாசார்ய ஸமாச்ரய: தேஹாவஸாநே முக்திஸ் ஸ்யாத் அந்திம ஸ்ம்ருதி வர்ஜனம்" என்கிற ஸம்ஸ்க்ருத ச்லோகங்களும்,

"செப்புகின்ற பரதத்வம் யானேயென்னச்செப்புதி
வேறொப்பிலாதாய் தரிசனமும் பேதமென்றே யுரைத்திடுக
தப்பிலாதவுபாயமதும் ப்ரபத்தியென்றே சாற்றிடுக
அப்ப! புகல்க இவையன்றி நினைவும் வேண்டா அந்திமத்தில்
இந்தச்சரீர அவதானந்தன்னிலிசையும் மோக்ஷமது
அந்தமில்லாக்குணத்தினனுக்காசாரியனும் பெரியநம்பி
சிந்தைதன்னுளிவையெல்லாம் சிந்தித்திருந்தானிளையாழ்வான்
முந்தியிவை நீ மொழியென்றே யருளிச்செய்தானருளாளன்."

என்கிற வடிவழகிய நம்பிதாஸரின் செய்யுளும் அந்த ஆறுவார்த்தைகளை நன்கு நிரூபித்துள்ளன. இவற்றுக்கு அடியேனும் வியாக்கியானமெழுதி வெளியிட்டிருக்கிறேனாதலால் இங்கு விவரிக்கவில்லை.

இவ்விஷயத்தில் சிலர் சங்கிப்பதை யநுவதித்துப் பரிஹாரம் செய்யவிரும்புகிறேன்; ஸ்ரீபாஷ்யகாரர் வித்யார்த்தி தசையிலிருந்தே மிகவும் ப்ரபுத்தர்; திருத்துழாய் பரிமளத்தோடே அங்குரிக்குமாப்போலே ஸ்வாமி மாஸ்த்ரார்த்தங்களிலே உண்மை யுணர்ச்சியோடு அவதரித்தவராகையாலே இவர்க்கு எதிலும் ஸம்

சயமோ விபர்யயமோ இருக்க ப்ரஸக்தியில்லை. அதிலும், ஸ்ரீமந்நாராயணனே பர தத்துவம், சித்து அசித்து ஈச்வரன் என்னும் மூன்று தத்துவங்கள் இயற்கையாக வெவ்வேறுயுள்ளன........என்பன போன்ற விஷயங்களில் ஸ்வாமிக்கு ஸந்தேஹ முண்டாக ப்ரஸக்தியில்லையாயிருக்க, இவர் திருக்கச்சிநம்பிகள் பக்கலிலே விஜ்ஞாபித்து ஸந்தேஹ நிர்ணயம் பெற்றாரென்று சொல்லுகிறவிது பொருந்துமோ? என்பது சிலருடைய சங்கை.

இதற்குப் பரிஹாரமுணர்த்துகிறோம். ஆறுவார்த்தையாகச் சொல்லப்படு கிற விவற்றில் எந்த ஆசாரியர் பக்கலிலே ஆச்ரயிப்பது என்கிற ஒரு விஷயத்தில் மட்டுமே ஸ்வாமிக்கு ஜிஜ்ஞாஸையிருக்க ப்ரஸக்தியுண்டு. ஆளவந்தார் திருவடிகளிலே ஆச்ரயிக்க விரும்பியிருந்தார். அது வாய்க்கவில்லை. பிறகு திருக்கச்சி நம்பிகளின் ஞானபக்தி விரக்திகளின் பௌஷ்கல்யத்தைக்கண்டு அவர் பக்கலிலே ஆச்ரயிக்கவெண்ணி அவரை யநுவர்த்தித்தார். அந்த நசையை நம்பிகள் ஸர்வாத்மநா அநுசிதமென்று அறவே போக்கிவிட்டார். பின்னை எந்த ஆசார்யரிடத்தில் திருவிலச்சினை பெறலாம்! என்று தளும்பியிருந்ததுண்டு ஆகவே இவ்வொரு விஷயம் தவிர மற்ற ஐந்து விஷயங்களில் ஸ்வாமிக்கு ஸந்தேஹமிருக்க ப்ரஸக்தியில்லைதான். ஆனாலும் ஜிஜ்ஞாஸை விளைந்த தெழியென் னென்னில், கூரத்தாழ்வான் (வரதராஜஸ்தவத்தில்) "ஸம்வதேத கில யத்ப்ரமாந்தரைஸ் தத்ப்ரமாண மிதியே ஹி மேநிரே" என்னும் சுலோகத்தினால் ஒரு பக்ஷம் ஸாதிக்கிறார். (அதாவது)—ப்ராமாணிகமானவொரு விஷயத்திற்கு ப்ரமாணாந்தர ஸம்வாதமுமுண்டானால் அது ப்ரபலமான ப்ராமாண்யத்தைப் பெறும் என்கை. அந்த ரீதியில் தேவப்பெருமாளுடைய திருவுள்ளத்தில் இசைவையுங் கண்டு களிக்கக் கருதிய எம்பெருமானார் திருக்கச்சிநம்பிகள் மூலமாக அதனை லபிக்கப் பெற்றாரென்பதில் விப்ரதிபத்திகொள்ளவேண்டிய அவசியமில்லை.

ஆண்டாள் திருப்பாவையில் இரண்டாம் பாட்டில் "உய்யுமாறெண்ணி யுகந்து" என்றதில். உய்யும் ஆறு—உஜ்ஜீவனஹேதுவான ஆறு வார்த்தைகளை எண்ணியுகக்கும் விஷயமும் பெரியோர்களால் அநுஸந்திக்கப்படுவதுண்டு. "பெரும்பூதூர் மாமுனிக்குப் பின்னானாள் திருவாக்கில் இவ்வர்த்தம் வெளிவருவதில் அஸம்பாவிதத்வசங்கைக்கு அவகாசமில்லையன்றோ.

ஸகலசாஸ்த்ரப்ரமேயமான தத்வஹித புருஷார்த்தங்களில் மிக முக்கியமானது புருஷார்த்தம். கைங்கர்யத்தையே புருஷார்த்தமாகக் கொண்டது ஸ்ரீ வைஷ்ணவ ஸித்தாந்தம். நம்மாழ்வார் "வழுவிலா வடிமை செய்யவேண்டு நாம்" என்றும், ஆளவந்தார் "கதா ஹமைகாந்திகநித்யகிங்கர: ப்ரஹர்ஷயிஷ்யாமி" என்றும், எம்பெருமானார் "நித்ய கைங்கர்ய ப்ராப்த்யபேக்ஷயா.....நித்ய கிங்கரோ பவாநி" என்றுமிந்த ஸ்ரீஸூக்திகளாலே நித்யகைங்கர்யத்தில் பாரிப்பும் ப்ரார்த்தனையுமாக இருந்தார்களேயன்றி அனுட்டித்து மகிழ்ந்ததாகத் தெரியவில்லை. இது அனுஷ்டான சேஷமானது திருக்கச்சிநம்பிகள் பக்கலிலேயாதலால் இது பற்றியே இவருடைய மஹிமை நிகரற்றதாயிற்று. ... ... *

# இதிஹாஸபுராண வினாவிடைகள் [6]

(ராமக்ருஷ்ண ஸம்பாஷணை)

வினா:— 'உத்தர ஸ்ரீராமாயணம் பிராமாணிகமன்று, கல்பிதம்'' என்றும் ''உத்தரகாண்டம் யாரோ எழுதி ராமாயணத்துடன் சேர்ந்தே போயிற்று'' என்றும் ஒரு பெரியார் பிரசாரம் செய்து வருகிறாரே; இதைப்பற்றி உம்முடைய அபிப்ராயமென்ன? (விடை) வெறும் பிரசாரமன்று; எழுதியும் வெளியிட்டுள்ளார்; "நாரதர் சொல்லி வால்மீகி இயற்றினார். அதில் ஒருவிதத் தவறும் இருக்கமுடியாது; ஓர் எழுத்துவிடாமல் எல்லாம் ஒப்புக்கொண்டே தீரவேண்டும்'' என்பதாயிருந்தால் எனக்கு ஒன்றும் சொல்ல இடமில்லை. 'அப்படியில்லை' உனக்குத் தோன்றியதைத் தோன்றியவாறு தாராளமாகச் சொல்லலாம், குற்றமில்லை, என்று பெரியோர் இடம் கொடுத்தால் உத்தரகாண்டத்தைப்பற்றிச் சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். நானும் எவ்வளவோ முயற்சி செய்துதான் பார்த்தேன், ஸ்ரீராமன் உலகத்துக்கு வழிகாட்ட அவதரித்த கடவுள்; சீதையை அரும்பாடுபட்டு இலங்கையிலிருந்து மீட்டுக்கொண்டு வந்த பின் ஊராரின் வம்புப் பேச்சைக் கேட்டுக் காட்டுக்கு அனுப்பிவிட்டான் என்கிற கொடூரச்செயலை, அவ்வட்சண புராணத்தை என் மனசுக்குச் சமாதானப்படுத்திக்கொள்ள முடியவேயில்லை. மிக்க அன்புடனும் பக்தியுடனும் முயற்சி செய்திருக்கிறேன். பெரியோர்கள் என்னை 'நாஸ்திகன்' சூனுமானுக் காரன், என்று சொல்லக்கூடாது. உண்மையில் இந்தக் கதையைச் சகிக்க என்னால் முடியவில்லை. நாஸ்திகனாயிருந்தால் ஒரு வேளை சகித்திருப்பேன்' என்று எழுதியச்சிட்டு வெளியிட்டுள்ளார்; மேலேயும் சில காரணங்களை நிரூபித்துத் தம்முடைய கொள்கையை நிலை நாட்டப்பார்க்கிறார். இதையெல்லாம் நீ பார்த்திருக்கிறாயல்லவோ. ... ... ... ...

வினா:—அதை உதாஹரித்துவிட்டதனால் எனக்கென்ன த்ருப்தி; அதைப்பற்றி உம்முடைய முடிவையன்றோ நான் கேட்கவிரும்புகிறேன். (விடை) இதிஹாஸ புராணகதைகளில் நம்முடைய ஆராய்ச்சிசக்தியைப் புகவிட்டு, இன்ன கதை ஸம்பாவிதம், இன்ன கதை அஸம்பாவிதம் என்று நமது அற்ப புத்தியால் நிரூபித்து நிர்ணயிப்பதென்று கொண்டால், உலகத்தில் விமர்சகர்களாகப் புகழ்பெற்ற பலரும் கூடி ஸகல புராண கதைகளையும் அஸத்தாக்கிவிட முடியும். உத்தர ஸ்ரீராமாயணத்தை அவலக்ஷண புராணமென்று இவர் சொல்லுகிறார்; ஸ்ரீராமாயண கதையையே அவலக்ஷண புராணமென்று நிரூபிப்பார் பலரையும் பார்த்திருக்கிறோம். உலகமெல்லாம் உச்சிமேல் வைத்து மெச்சும் பகவத்கீதையையும் பழிப்பவர்களை நாம் பார்த்திருக்கிறோம். அன்னாருடைய உபபாதனங்களைக் கேட்கும்போது 'ஆமாம்; பகவத்கீதை கல்பிதந்தான்.' என்று பரம ஆஸ்திகர்களின் நெஞ்சமும் நம்பிவிடுகின்றதாம். ... ... ... ... ...

வினா:— பிரகிருதம் உத்தர ஸ்ரீராமாயணத்தைப் பற்றி மட்டும் ஸாதிக்க வேணும். மிகத்திடமான நிருபணங்கள் வேணும். (விடை) நம்மைக்காட்டிலும் பதினாயிரமடங்கு மேதாவிகளான பூருவர்கள் இவ்வுத்தரராம கதையை ஆதரிக்கிறார்களா? இல்லையா? என்பதைப்பற்றி முன்னம் விமர்சிப்போம். பண்டைக்

காலத்து மஹாகவிகளில் பவபூதியென்பவர் உத்தரராம சரிதம் வெகு ஆச்சரியமாக எழுதியிருக்கிறரென்பதும் அது உலகமெங்கும் நற்புகழ் பெற்றுப் பரவியிருக்கிறதென்பதும் ப்ரஸித்தமல்லவா? ... ... ...

வினு:— ஆக்ஷேபகரான பெரியாருங்கூட "பவபூதி தன் ஸாமர்த்தியத்தை உபயோகித்துப் பழைய கதையை ஓரளவு மாற்றிவிட்டான்....பவபூதி தன் கற்பனு சாமர்த்தியத்தை உபயோகித்து ஊர் வம்புக்குப் பயந்த கதையின் அவலக்ஷணத்தைக் குறைத்துவிட்டான்" என்கிறரே; இது சரியா? (விடை) இது அர்த்தமில்லாத வார்த்தையே; இதிஹாஸ புராண கதைகளை நாடகங்களில் அமைக்கின்ற மஹா கவிகள் யாவருமே இடையிடையே தங்கள் கற்பனு சக்தியை உபயோகித்துக் கதையின் சில பாகங்களை மாற்றுவது வழக்கம். மஹாபாரதத்திலுள்ள சகுந்தலா உபாக்கியானத்தைக் காளிதாஸர் சாகுந்தல நாடகமாக இயற்றுகையில் கதையின் போக்கை எவ்வளவு மாறுபடுத்தியிருக்கின்றரென்று பார்க்கவேணும். முராரி கவி ஸ்ரீராமாயண கதையை அநர்க்கராகவ நாடகமாக இயற்றுகையில் கதையின் ரீதியை எவ்வளவு மாற்றியிருக்கிறரென்று பார்க்கவேணும். உத்தரராம சரிதமெழுதிய பவபூதியே மஹாவீர சரித நாடகமுமியற்றியுள்ளார். அதில் ஸ்ரீராமாயண கதையை எவ்வளவு மாற்றியிருக்கின்றரென்று பார்க்கவேணும் இவ்வளவும் விமர்சித்தால் கதைப்போக்கைச் சிறிது மாற்றுவதென்பது நாடகங்களின் இயல்பு என்பது புலனுகும். ... ... ... ... ...

வினு — மேலே குறித்த பெரியார் உத்தர ஸ்ரீராமாயணம் முழுவதையுமே கல்பிதமெனகிறரா? அல்லது, லோகாபவாதத்தை ஆதரித்துப் பிராட்டியைக் காட்டுக்குப் போகவிட்ட கதையை மாத்திரம் கல்பிதமென்கிறரா? (விடை) அவர் 'உத்தரகாண்டம் யாரோ எழுதினது ராமாயணத்துடன் சேர்ந்தே போயிற்று" என்றெழுதியிருப்பதனுல் உத்தர ஸ்ரீராமாயணம் முழுவதையுமே கல்பிதமென்கிறரென்று நன்கு விளங்காநின்றது. ... ... ...

வினு:— உத்தர ஸ்ரீராமாயணத்தை நம்முடைய ஆழ்வாராசாரியர்களில் யாராகிலும் தம்முடைய நூல்களில் தழுவியிருப்பதுண்டோ? (விடை) ஏனில்லை? தாராளமாகவுண்டு. குலசேகராழ்வார் தமது திருமொழியில் பத்தாவது பதிகத்தில் ஸ்ரீராமாயண கதையை உத்தரகாண்டமுமுட்பட வே ஓர் பாடியிருக்கிறர். வேதாந்தவாசிரியரும் ரகுவீரகத்யத்தில் உத்தரகாண்ட கதையைச் சேர்த்தே முடித்திருக்கிறர். ஆக, ஆழ்வாராசாரியர்களுக்கு உத்தரகாண்டம் உடன்பாடே யென்பது ஐயமற்றது. ... ... ... ...

வினு:— ஆக்ஷேபகர் இத்தகைய ஆசார்ய ஸ்ரீஸூக்திகளை ஒரு பொருளாக எண்ணுர் போலிருக்கிறதே. ஏற்கெனவே கல்பிதமாகி ஏடுபட்டுக்கிடந்த கதையைக் கவிகளும் ஆசாரியர்களும் நம்பித் தழுவிவிட்டார்கள் என்று அவர் வாதிக்கவல்லவராதலால் தேவரீர் காட்டிய பிரமாணங்கள் அவருடையமனதைத் தெளிவிக்குமா? (விடை) நம்மைக்காட்டிலும் ஆயிரமடங்கு மேதாவிகளான பூருவர்கள் இக்கதையை அதிசங்கியாமல் ஆதரித்திருக்கிறர்களென்பதைப் பிராமாணிகர்கட்கு மூதலிக்கவே இதை நான் எடுத்துக்காட்டினேன். அவர் நம்பாவிட்டாலென்ன?

வினு:— ராமன் உலகத்துக்கு வழி காட்ட அவதரித்த கடவுள்; ஊரார்ன் வம்புப்பேச்சைக்கேட்டுச் சீதையைக் காட்டுக்கு அனுப்பிவிடமாட்டான் என்கிருரே அவர். (விடை) இராமன் உலகத்துக்கு வழிகாட்ட அவதரித்தபடியினுல் தான் இங்ஙனம் செய்ய நேர்ந்தது என்று திண்ணமாகத் தெரிந்துகொள்ள வேண்டும். எப்படிப்பட்டவரும் லோகாபவாதத்திற்கு அஞ்சியே வர்த்திக்கவேணுமென்று வழிகாட்டினபடி. ... ... ... ... ...

வினு:— சீதையை அரும்பாடுபட்டு இலங்கையிலிருந்து மீட்டுக்கொண்டு வந்தபின் தானே காட்டுக்கு ஓட்டுவாரா? என்கிருரே; இதற்கு என்னசொல்லுவது? (விடை) இராமன் அரும்பாடு பட்டதாக நினைப்பது கேவலம் கதைப்போக்கில் மாத்திரமே கண்செலுத்துவார்க்கு உற்றது. "பொல்லாவரக்கனைக் கிள்ளிக்களைந்தானை" என்று அவலீலைபாகப் பேசினுள் ஆண்டாள். 'ஸேதுபந்தநமுகா: க்ரீடாஸ்தவாடம்பரம்" என்றர் கூரத்தாழ்வான். ... ... ...

வினு:— "ஸம்க்ஷேபராமாயணத்தில் உத்தரகாண்ட சரிதை இல்லாமையால் இது கல்பிதம்" என்கிருரே இது என்ன? (விடை) ஸம்க்ஷேப ராமாயணத்தில் பாலகாண்ட கதை சிறிதும் தொடப்படவில்லை என்பது நிர்விவாதம். யுவராஜ பட்டாபிஷேக முயற்சி முதலாகவே நாரத முனிவரால் வான்மீகிக்கு உபதேசிக்கப் பட்டிருக்கின்றதென்பது வ்யக்தம்; இது கொண்டு பாலகாண்டமும் கல்பிதமென்ன வேண்டிவருமே.

வினு:— "இராமன் அரசாண்டு வரும்போது அந்நகரில் அற்பகுணமுள்ளவன் நாஸ்திகன் துஷ்டன் மருந்துக்குக் கூட ஒருவன் அகப்படமாட்டான் என்று மிகமிகச் சொல்லியிருப்பதற்கு முரணுக சீதையைப் பழிக்கும் ஜனங்களிருந்ததாக ஒப்புக்கொள்ளவே முடியாது? என்கிருரே? (விடை) க்ருதயுகத்தில் தருமதேவதையானது நான்கு கால்களோடும் குறைவின்றி வாழ்ந்ததாகச் சொல்லப்படுகிறது. அப்படிப்பட்ட காலத்திலும் அதர்மச்செயல்கள் பல நடந்தனவாகப் புராணங்கள் கூறுகின்றன. பெரும்பான்மையாகச் சொல்லப்படும் விஷயம் சிறுபான்மையை அழிக்கில்லாததென்று அறியவேணும். 'ராமராஜ்யத்தில் இரப்பாளன் ஒருவன் கூட இல்லை; அனைவரும் உதாரர்களாகவே வாழ்ந்து வந்தார்கள், என்று சொல்லப் பட்டிருக்கிறது. இரப்பாளன் ஒருவன் கூட இல்லையாகுல் அந்த உதாரர்கள் தானம் பண்ணினதுயார்க்கு? என்றுகேட்டால்இப்பெரியார் என்னவிடையிறுப்பர்?

வினு:— "அப்படி யாராவது பேசினுலும் அதை அந்த ராமன் ஏன் காதில் போட்டுக்கொண்டான்?" என்கிருரே? (விடை) இராமனையே நேரில் கண்டுதான் கேட்கவேணும். ஸ்யமந்தகமணி விஷயமாகக் கண்ணனையும் இங்ஙனே கேள்வி கேட்கலாம். இராமனைக் கைகேயி காட்டுக்குப் போகச் சொன்னுலும் அவள் பேச்சுக்கு உடன் பட்ட தந்தைதான் போகச் சொன்னுலும் இராமன் ஏன் காட்டுக்குப் போகவேண்டும்? முடிசூடுதற்காகச் சடங்குகள் பலவும் அனுட்டித்து ஆய்விட்டபடியால் இனி வனம் போக முடியாதென்று இராமன் ஏன் மறுக்கக்கூடாது? என்று பலர் கேட்பதுண்டு இப்படி ஒன்றிரண்டு கேள்விகளல்ல; பல கேள்விகள் பலர் கேட்பதுண்டு அக்கேள்விகளோடு கூடவே இக் கேள்வியும் கேட்கவேண்டியதே.

வினா:— யுத்த காண்டத்தின் முடிவிலுள்ள அக்நி ப்ரவேச கதையும் கல்பிதமே யென்று காட்டுவதற்கும் இப்பெரியார் இறங்கியிருக்கின்றாரே? (விடை) இவர் தம் புத்திக்குப் பொருந்தாத கதைகளையெல்லாம் கல்பிதமென்று சழித்துவிடப் பார்க்கிறார். இவருடைய புத்திக்குப் பொருந்தும் கதைகள் மற்றொரு மேதாவியின் புத்திக்குப் பொருந்தாமலிருக்கலாம். அவ்வண்ணமாக ஒவ்வொருவருடைய நிரூபணங்களையும் கேட்டே இனி நாம் புராணங்களை ஆதரிக்கவேண்டும் போலும்.

வினா:— இத்தகைய அநீதியான காரியத்தை இராமன் செய்தால் அநுமான் வெறுமனிருப்பரா? லக்ஷ்மணன் பரதன் இவர்கள் தாம் சகித்திருப்பர்களா? ஸீதைக்காக முன்பு உயிர் துறந்த ஜடாயு மீண்டும் உயிரெழுந்து வந்து தடுத்திருக்க மாட்டாரா? என்கிறாரே; இவற்றுக்கு என்ன பதில்? (விடை) இவை ஸ்ரீராமாயணம் நடையாடுந்தேசத்தில் விளையக் கூடியனவல்ல; பஞ்சவடியில் பிராட்டிக்குக் காவலாக அமைந்திருந்த ஜடாயு இராவணன் வருகிற காலத்தில் எங்குச் சென்றார்? லக்ஷ்மணன் மாரீசனது மாயக்குரலைக் கேட்டுக் கலங்கின ஸீதையை விட்டு வெளியேறினாலும் விளைவதறியக்கூடியவனாகையாலே பிராட்டியின் கட்டளைப்படி இராமனிடம் போவதுபோல் காட்டிவிட்டு ஒரு மூலையில் பதுங்கியிருந்து இராவணன் பிராட்டியைக்கவர்ந்து செல்லாதபடி காத்திருக்கலாகாதா? என்கிற பலபலகேள்விகளைக் கேட்பார் மலிந்திருக்குமிவ்வுலகில் இப்பெரியாருடைய கேள்விகள் வியப்பை விளைப்பனவல்லவே; வாலியை நோக்கி விடையிறுத்த பெருமான் ''ஸூக்ஷ்ம: பரமதுர்ஜ்ஞேய: ஸதாம் தர்ம: ப்லவங்கம!'' என்றார். ''தர்மஸ்ய தத்வம் நிஹிதம் குஹாயாம்'' என்றார் தர்மபுத்திரர்; நம்போல்வாருடைய சிற்றறிவுக்கு எட்டுமதன்று தருமநுட்பம். (உத்தரராமாயண வினா விடைகள் முடிந்தன)

## ஸம்ப்ரதாயார்த்த வினாவிடைகள்

வினா:— ஸ்ரீராமாநுஜர்க்கு முற்பட்ட ஆசாரியர்கள் அவருடைய திருமுடி ஸம்பந்தத்தினாலும், பிற்பட்ட ஆசாரியர்கள் அவருடைய திருவடி ஸம்பந்தத்தினாலும் உத்தீர்ணரானார்கள் என்கிற ஐதிஹ்யம் ஸம்பிரதாய நூல்களிலுள்ளது; இதைச் சிலவகுப்பினர் அஸங்கதமென்று சொல்லி வருகிறார்களல்லவா? இதில் தேவரீருடைய திருவுள்ளமெப்படி? (விடை) வேதாந்தாசாரியர் இவ்வைதிஹ்யத்தை நியாயபரிசுத்தியின் உபக்ரமத்திலிட்ட 'பத்யுஸ் ஸம்யமிநாம் ப்ரணம்ய சரணௌ தத்பாத கோடீரயோஸ் ஸம்பந்தேந ஸமித்யமாநவிபவாந்'' என்கிற ச்லோகத்தில் பொறித்து வைத்தார். ''ஆஸ்வாத்ய த்வத்பதஸரஸிஜம் த்வந்த்வமாச்ரித்ய. பூர்வே மூர்த்நா யஸ்யாந்வயமுபகதா தேசிகா முக்திமாபு:; ஸோயம் ராமாநுஜமுநிரபி ஸ்வீயமுக்திம் கரஸ்தாம் யத்ஸம்பந்தாத் அமநுத கதம் வர்ண்யதே கூரநாத:'' என்கிற ச்லோக ரத்னம் பட்டர் அருளிச் செய்தது; இந்த ச்லோகத்தில் சொல்லுவதென்னவென்றால் எம்பெருமானாருடைய திருமுடி ஸம்பந்தத்தினால் முற்பட்ட ஆசாரியர்கள் உஜ்ஜீவித்தார்களென்றும், பிற்பட்ட ஆசாரியர்கள் அவருடைய திருவடி ஸம்பந்தத்தினால் உஜ்ஜீவித்தார்களென்றும் சொல்லுகிறது.

வினா:— பிற்பட்டவர்களுக்குப் பாஷ்யகாரருடைய திருவடி ஸம்பந்தத்தினால் மோக்ஷமென்றால் இது பொருந்தும். இதில் ஆக்ஷேபமுதிக்க வழியில்லை. முற்பட்ட

வர்களுக்குத் திருமுடி ஸம்பந்தத்தினால் மோக்ஷ முண்டாயிற்றென்றால் இது அநந்விதமான வார்த்தையல்லவா? இதுஎப்படி பொருந்தும்? ஸ்ரீமந்நாதமுனிகள், உய்யக்கொண்டார், மணக்கால் நம்பி போல்வார்தானே பாஷ்யகாரர்க்கு முற்பட்டவர்கள். அவர்கள் என்றைக்கோ பரமபதம் போய்ச்சேர்ந்தவர்களன்றோ? அவர்கள் காலத்தில் பாஷ்யகாரர் அவதரித்திருந்தாலன்றோ இவருடைய திருமுடி ஸம்பந்தம் அவர்களுக்கு நேர்ந்ததென்று சொல்ல இடமுண்டு; இவருடைய அவதாரமே நடந்திராத ஸமயத்தில் இவருடைய திருமுடி ஸம்பந்தம் அவர்களுக்கு எப்படி ப்ராப்தமாகக் கூடும்? இது ஸர்வாத்மநா அஸம்பாவிதமான வார்த்தையென்று தோன்றுகிறதே. இதற்கு த்ருப்திகரமான விடை தந்தருளவேணும். (விடை) இத்தகைய ஏற்றம் எம்பெருமானார்க்குச் சொல்லப்படுகின்றதேயன்றி ஸ்ரீமந்நாதமுனிகளுக்கோ ஆளவந்தாருக்கோ மற்றும் வேறு ஆசாரியர்க்கோ சொல்லப்பட்டிருக்கவில்லை. "கலியுங்கெடுங்கண்டு கொண்மின்" என்றவிடத்து ஐதிஹ்யத்தின்படி எம்பெருமானார் பவிஷ்யதாசார்யராக நம்மாழ்வார் திருவடிகளில் பண்டேதோன்றினவராதலால் அவருடைய திருவவதாரத்தைப் பிற்பட்டதாக வைத்துப் பூர்வபக்ஷம் செய்வது பொருத்தமன்று. இன்னமும் விரிவாகச் சொல்லவேண்டியதுண்டு; அது குருமுகமாகக் கேட்கத்தக்கது. 

வினா:— வேதத்தில் எம்பெருமானுடைய பரத்துவம் மட்டும் ஓதப்பட்டிருக்கின்றதேயன்றி ஸௌலப்யம் எங்குமே பேசப்பட்டிருக்கவில்லை யென்கிறார்களே; இஃது உண்மைதானோ? (விடை) வேதமோதினவர்கள் இப்படிச் சொல்லார்கள்; வேதத்தில் ஸௌலப்யமும் சொல்லப்பட்டே யுள்ளது; ஸௌலப்யமில்லாத பரத்துவமும், பரத்வமில்லாத ஸௌலப்யமும் புகழத் தக்கவையல்ல வென்பது ஆசாரியர்களின் திருவுள்ளம் "பரத்வங்கண்டு அகலாமைக்கு ஸௌலப்யம்; ஸௌலப்யங்கண்டு இகழாமைக்குப் பரத்வம்" என்பது ஆசாரியர்களின் திருவாக்கு. மேருமலை, கைலாஸமலை க்ஷீராப்தி—இத்யாதிகளில் பரத்வமிருந்தும் ஸௌலப்யமில்லை. காஷ்ட லோஷ்டாதிகளில் ஸௌலப்யமிருந்தும் பரத்வமில்லை. பரத்வ ஸௌலப்யங்களிரண்டும் ஸாமாநாதிகரண்யம் பெற்றுப் பொலிவது எம்பெருமானிடத்தில் தான். ஸௌலப்யத்தை நடவடிக்கைகளால் காட்ட முடியுமேயல்லது வேறுவகையினால்காட்ட இயலாது. அதற்காகவே பகவான் பலப்பல திருவவதாரங்களைச் செய்தருளினான்; திருவவதாரங்களில் பெரும்பாலும் காட்டினது ஸௌலப்யத்தையே. 

வினா:— திருவவதாரத்தைப்பற்றி இதிஹாஸபுராணங்களில் பேசியிருக்கின்றதே யல்லது வேதத்தில் பேசியிருக்கவில்லையாமே. (விடை) அது தவறு; "அஜாயமானோ பஹுதா விஜாயதே" என்கிற வேதவாக்கியம் அந்தணர்களைவருமறிந்தது. அஜாயமாந:-பிறப்பிலியாயிருக்கச் செய்தேயும், பஹுதா விஜாயதே-பலபடியாகப் பிறக்கிறான் எம்பெருமான் என்பது இந்த வேதவாக்கியத்திற்குப் பொருள். மத்ஸ்யகூர்மாதிவிபவாவதாரங்களை யெல்லாம் உட்கொண்டேயன்றோ இந்த சுருதிவாக்கியம் அவதரித்தது. இதன் பொருளை மற்றொருபடியாகச் சொல்ல நினைத்தால் 'பரத்வசாலியாயிருக்கச் செய்தேயும் ஸௌலப்யசாலியாயுமிராநின்றான்' என்று சொல்லத்தட்டில்லை. இதுதான் உண்மைப் பொருள்.

வினா:— இந்த ஒரு வாக்கியந்தவிர வேறு வாக்கியம் கிடையாதே வேதத்தில். (விடை) ஏனில்லை? "பிதா புத்ரேண பித்ருமாந் யோநியோநௌ" என்பது காடகச்ருதி வாக்யம். இதன் பொருளாவது. எம்பெருமான் ஸகல லோக பிதாவாயிருக்கச் செய்தேயும் தன்னுடைய புத்திரர்களைத் தனக்குப் பிதாவாகக் கொண்டு *எந்நின்ற யோனியுமாய்ப் பிறக்கிறான் என்பதாம். இந்த ச்ருதிவாக்யத்தில் ஸௌலப்யம் ஸுஸ்பஷ்டமாகவே காட்டப்பட்டு விட்டது. ஸகல ஜகத் காரண பூதனாகவே யிருக்க வேண்டியவன் கார்ய பூதனுமாகிறானென்றால் ஸௌலப்யத்தை இதைவிட வேறுவிதமாகச் சொல்லுவதெங்ஙனம்? முக்கியமாக வொன்று தெரிவிக்கப்படுகிறது. நம் ஆசாரியர்கள் திருமந்திரத்திலுள்ள நாராயண பதத்தை விவரிக்குமிடத்து நாராயண பதத்திற்கு ஷஷ்டீதத்புருஷ ஸமாஸமும் பஹுவ்ரீஹி ஸமாஸமுமாகிற இரண்டு ஸமாஸங்கள் காட்டிப் பொருளை விளக்கி 'இவற்றால் பலித்தது பரத்வ ஸௌலப்யங்கள்" என்று நிகமித்தார்கள். திருமந்த்ரார்த்தமாகையாலே இதனை நான் இங்கு விவரிக்கின்றிலேன்; ரஹஸ்ய வியாக்கியானங்களிலே கண்டு கொள்வது. சாஸ்த்ரஜ்ஞர்கள் சில விஷயங்களை 'தர்மிக்ராஹக மாநஸித்தம்' என்பர்கள்; இங்குமப்படியே: பராத்பரனை எம்பெருமானுக்கு வாசகமான திருநாமங்களுள் தலைமை பெற்றதான நாராயண நாமத்தை நாம் ஸ்மரிக்கும்போதே ஸௌலப்யமும் தோன்றியே தீருமென்பதை உணரவேணும்.

வினா:— எம்பெருமான் அவதரிப்பதுண்டென்று வேதமோதிற்றேயொழிய அவதாரமொன்றையும் எடுத்துச் சொல்லவில்லையே? (விடை) ஏனில்லை? "இதம் விஷ்ணுர் விசக்ரமே த்ரேதா நிததே பதம்" என்பது முதலான வேதவாக்கியங்கள் எம்பெருமானுலகளந்த சரிதையைச் சொல்லுகின்றன. இவ்வபதானத்திலே பரத்வம் விளங்குகிறதா? ஸௌலப்யம் விளங்குகிறதாவென்று சர்ச்சைசெய்த பெரியார்கள் பரத்வம் விளங்குகின்றதென்னும் பக்ஷத்தை மறுக்காமல் ஸௌலப்யம் மிக விளங்குகின்றதென்று திருவுள்ளம் பற்றினார்கள் "தாவியன்றுலகமெல்லாம் தலை விளாக்கொண்டவெந்தாய்! என்கிற திருமாலைப் பாசுரத்தின்படி வஸிஷ்ட சண்டாள விபாகமற யுகபதேவ எல்லாரையும் விஷயீகரித்தது ஒப்பற்ற ஸௌலப்ய கார்யமன்றோ. இஃதொன்றே போதுமே வேதத்தில் ஸௌலப்ய ப்ரதிபாதனமுண்டென்றறிய. உருக்மய: என்று வேணுகானம் செய்த அவதாரமுஞ் சொல்லிற்று.

வினா:— 'வணங்குந் துறைகள் பலபலவாக்கி மதி விகற்பால் பிணங்குஞ் சமயம் பலபலவாக்கி' என்று நம்மாழ்வாரருளிச் செய்தபடியே உலகில் பலபல மதங்கள் தோன்றி யிருக்கின்றனவன்றோ? இவற்றில் பாகுபாடுகளுண்டானால் அதைப்பற்றித் தெரிந்து கொள்ள விரும்புகிறேன். (விடை) பொதுவாக மதங்கள் வைதிக மதமென்றும் அவைதிக மதமென்றும் இருவகுப்பாகும் வேதத்தைப் பிரமாணமாகக்கொள்ளும் மதம் வைதிக மதம். வேதத்தைப் புறக்கணித்து ஸ்வதந்திரமாகத் தோன்றிய மதம் அவைதிகமதம். அவைதிக மதங்களிற் காட்டிலும் வைதிகமதம் சிறந்ததென்னுமிடத்தை நாம் விவரிக்க வேணுமோ?

வினா:—மதங்களைத்தானே தரிசனமென்றும் வழங்குவது; எந்ததரிசனஞ் சிறந்தது? (விடை)வைதிகமதங்களுள்பரமபவித்திரமானராமாநுஜதரிசனம்மிகச்சிறந்து

விளங்குகின்றது. நம்மாழ்வார் திருவாய்மொழி தொடங்கும்போது "உளன் சுடர் மிகு சுருதியுள் இவையுண்ட சுரனே" என்கிற பாசுரத்தினால் 'தாம் போதிக்கும் பரமபுருஷன் வேதங்களிலே விளங்குபவன்' என்றருளிச்செய்கையாலே இக்கலியுகத்தில் அவ்வாழ்வார் தொடக்கமாகப் பரவியுள்ள விசிஷ்டாத்வைத ஸம்பிரதாயம் பரமவைதிகமென்னத் தட்டில்லை. ப்ரமாணம், ப்ரமாதா, ப்ரமேயம் என்ற மூன்று வகுப்புகளும் நம் தரிசனத்தில்தான் சீர்மைபெற்று விளங்குவன.

வினா:— 'ஆழ்வார்கள் வாழி; அருளிச்செயல் வாழி' என்னுமுபதேச ரத்னமாலைப் பாசுரத்தினால் ஆழ்வாரருளிச் செயல்களுக்கு மட்டுந்தானே வாழ்த்துக்கூறப்பட்டது மணவாளமாமுனிகளால்.. (விடை) அப்பாசுரத்தில் 'செய்ய மறை தன்னுடனே சேர்ந்து'. என்றதையும் காணவேணும். ப்ரமாணங்களும் ப்ரமாதாக்களும் ப்ரமேயங்களும் ஸாரமாகத் தெரிவிக்கப்பட்டமை காண்க. வடமொழி, தென்மொழி வேதங்களாகிற உபய வேதங்களும் ஸ்ரீபாஷ்ய பகவத்விஷயாதிகளும் நமக்கு ப்ரமாணம். யதார்த்தஜ்ஞான நிதிகளான ஸ்ரீமந்நாதமுனிகள் ஆளவந்தார் எம்பெருமானார் போல்வாரான மஹாசார்யர்களே ப்ரமாதாக்களில் தலைசிறந்து விளங்குபவர். ஸகல சேதநாசேதநசரீரகனாய் ஸமஸ்த கல்யாண குணாத்மகனான ஸ்ரீமந்நாராயணனே பரதத்துவமென்றும், அவனுடைய திருவடித் தாமரைகளில் பண்ணும் ப்ரபத்தியே பரஹிதமென்றும், 'நலமந்தமில்லதோர் நாட்டிலே நித்யாநந்தமயமான நித்ய கைங்கர்யமே பரம புருஷார்த்தமென்றும் இங்ஙனே கூறப்படும் அர்த்த விசேஷங்களே ப்ரமேய ச்ரேஷ்டங்களாக விளங்குகின்றன. ஆக இத்தகைய ப்ரமாண ப்ரமாத்ரு ப்ரமேய வைசிஷ்ட்யமே நம்முடைய தரிசனத்தின் சிறப்புக்கு ஹேதுவாகாநின்றது.

வினா:— இதரமதஸ்தர்களையும் வைதிகர்களாகக் கொள்ளலாமன்றோ? (விடை) பரமவைதிகர்களென்கிற ஏற்றம் நமக்கே உரியது. ப்ரத்யக்ஷத்தாலோ அநுமானத்தாலோ அறிந்துகொள்ள முடியாத அர்த்த விசேஷங்களையறிவிக்கும் வாங்மயமே வேதமெனப்படும். "ப்ரத்யக்ஷேணாநுமித்யா வா யஸ்தூபாயோ ந புத்த்யதே, யத் தம் விதந்தி வேதேந தஸ்மாத் வேதஸ்ய வேததா" என்கிற ப்ரமாணம் இங்கே அநுஸந்தேயம். வேதத்தை ப்ரமாணமாக இசையாத சார்வாக ஜைந பௌத்தாதிகள் பாஹ்யர்களெனப்படுவர். வேதத்தைப் பரமப்ரமாணமாக இசைந்துவைத்தும் பரப்ரஹ்மம் குணசூந்யமென்றும் அலக்ஷ்மீகமென்றும் அசரீரகமென்றும் விபூதிவிரஹிதமென்றும் இங்ஙனே மனம்போனபடியெல்லாம் பேசுபவர்கள் குத்ருஷ்டிகளெனப்படுவர். குத்ருஷ்டிகளானாலும் வேதத்தைப்ரமாணமாக இசையுமவர்கள் வேதபாஹ்யர்களிற் காட்டிலும் மேம்பட்டவர்களன்றோவென்று நினைக்கக்கூடும். பாஹ்யர்களோடு குத்ருஷ்டிகளோடு ஒரு வாசியில்லையென்றருளிச் செய்கிறார் கூரத்தாழ்வான் (ஸ்ரீவைகுண்டஸ்தவே)—"பாஹ்யா: குத்ருஷ்டய இதி த்விதயேபி அபாரம் கோரம் தமஸ் ஸமுபயாந்தி நஹீக்ஷஸே தாந்" இத்யாதியாலே.

வினா:–ஸ்ரீவைஷ்ணவர்களிற் காட்டிலும் ஸ்மார்த்தர்கள் வேதாத்யயனத்திலே அதிகமான அபிநிவேசத்தைக் காட்டுகின்றவர்களல்லவா? வேதமோதினவர்களின் ஸங்கியை ஸ்மார்த்த வகுப்பிற்போல வைணவ வகுப்பில் தேற மாட்டாதென்று

நினைக்கிறேன். இந்த ஏற்றம் அவர்களுக்கு அஸாதாரணமல்லவா? (விடை) அதற்கென்ன ஸந்தேஹம்? ஸ்ரீ வைஷ்ணவ வகுப்பில் வேதமோதினவர்கள் நூற்றுக்கு ஒருவரிருவர் தேறக்கூடும். ... ... ... ...

வினா:— ஸ்ரீவைஷ்ணவேதரர்களின் வகுப்பில் வேதமோதினவர்கள் அதிகமாகத் தேறுகிறார்களென்பதை வைத்துக்கொண்டு அவர்கள் பரமவைதிகர்களல்லர் என்றால் இது யுக்தமாகுமா? (விடை) வேதத்தின் உண்மைப் பொருளையறியாமல் வேதத்தை உருச் சொல்லிக் கொண்டிருப்பதனால் யாது பயன்? "வேதபாரபராக் ராந்தஸ் ஸ வை ப்ராஹ்மணகர்த்தப:" என்று ப்ரஸித்தமான ப்ரமாணம் உனக்குத் தெரியாதா? "குங்குமஞ்சுமந்த கழுதையோபாதி" என்று ஸ்ரீவசனபூஷணமும் ஓதியிருக்கிறாயல்லவா? தத்வஹித புருஷார்த்தங்களுக்கு வேதமே தலையான ப்ரமாணம். இதிஹாஸ புராணங்கள் வேதோபப்ரும்ஹணார்த்தமாகவே அவதரித்தவை. இதிஹாஸ புராணங்களைக் கொண்டே வேதார்த்த நிர்ணயம்பண்ண வேண்டும். இதிஹாஸ புராணங்களை அநாதரிப்பவர்கள் அல்பச்ருதர்களெனப் படுகிறார்கள். "பிபேத்யல்பச்ருதாத் வேதோ மாமயம் ப்ரதரிஷ்யதி" என்கிற ப்ரமாணமும் நீயறியாததன்றே? அல்பச்ருதர்களால் வேதம் சலக்கப்படுவதான உண்மையை நீ யுணரவேண்டும்.

வினா:— தேவரீர் ஸாதிப்பது ஸரி; வேதங்களுக்கு பாஷ்ய மியற்றின பெருமை ஸ்ரீவைஷ்ணவர்களில் ஒருவர்க்குமில்லையே. வித்யாரண்ய பட்டபாஸ்கராதிகளான ஸ்ரீவைஷ்ணவேதரர்களே யன்றோ வேதபாஷ்யங்கள் செய்திருக்கிறார்கள். அவர்களை வேதப் பொருளறியாதவர்களென்று சொல்லி விடலாமா? (விடை) அவர்கள் வேதபாஷ்யங்கள் இயற்றியுள்ளார்களென்று இவ்வளவு மட்டும் நீ தெரிந்து கொண்டிருக்கிறாயே யொழிய அவற்றை உட்புகுந்து பார்த்திருக்கிறாயோ? பார்த்தவர்கள் என்ன தெரிவிக்கிறார்களென்பதை நீ அவசியம் தெரிந்து கொள்ளவேண்டும்.

வினா:— நான் வேதமோதியிருந்தாலன்றோ வேதபாஷ்யங்களைப் பார்க்கவோ அவற்றை உட்புகுந்து பார்க்கவோ அவகாச முண்டாகும். வேதகந்தமேயறியாதவன் நான். வேதபாஷ்யங்களில் ஏதாவது கோளாறுகளிருந்தால் அதைப் பற்றி தேவரீரே விளக்கிக் கூறவேணும் (விடை) வேதமோதாதவர்களுக்கு இதை விளக்கிக் கூறுவதனால் பயனில்லை. விஷயம் ரஸிக்க மாட்டாதானபடியாலே விவரித்துச் சொல்லாமல் ஸாரமாகச் சொல்லுகிறேன்கேள். வேதபாஷ்ய விமர்சனம், வேதபாஷ்ய பரிசீலனம், பதபாட பரித்ராணம், பதபாட பரிசுத்தி முதலான சில க்ரந்தங்களையும். இவற்றுக்குத் தலையான வேதாத்யயந ஸர்வஸ்வக்ரந்தத்தையும் காஞ்சி க்ரந்தமாலா கார்யாலயத்தில் நீ பெற்று வாசித்துப் பார்ப்பதோ, அறிஞர் மூலமாக அவற்றின் பொருள்களைக் கேட்பதோ செய்தால், வேதத்தின் பொருளை நிர்ணயிப்பதற்கென்றே முக்கியமாக அவதரித்த பதபாடத்திற்குச் சேராதபடி வித்யாரண்ய பட்டபாஸ்கர பாஷ்யங்கள் ஜனித்திருக்கின்றன வென்பதை எளிதாக வுணரலாம். ஆகவே "அந்யதா க்ருதம் அக்ருதம் பவதி" என்கிற நியாயத்தாலே அவர்கள் பாஷ்யமியற்றினதும் இயற்றாததும் பரியாயமே யென்று கொள்ளாய்; இது வொரு பெரிய விஷயங்காண். இனி வேறுவிஷயங்களிற் பேசுவோம்.

(தொடரும்)

ஸ்ரீ:

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்



ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்

**ஸ்ரீகாஞ்சீ. பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரியர் ஸ்வாமியின்**

## நள வூ மீன விசாகோத்ஸவப் பத்திரிகை

**ஸ்ரீஸ்வாமியின் எண்பந்தாறுவது திருநக்ஷத்திர பூர்த்தியை முன்னிட்டு**

**ஸ்ரீகாஞ்சியில் ஸ்வாமியின் திருமாளிகையில்**

பங்குனிமீ 15உ (**28—3—77**) திங்கட்கிழமை திருவாதிரை முதல்

பங்குனிமீ 24உ (**6—4—77**) புதன்கிழமை திருவிசாகம் வரை

**வேதபாராயணம், திவ்யப்ரபந்தஸேவை, ரஹஸ்யாநுஸந்தானம், ஸ்தோத்ரபாடம் வித்வான்களின் உபந்யாஸம் இவை நடைபெறும். ஆப்தர்கள் அனைவரும் கூடியிருந்து சிறப்பாக நடப்பிக்கும்படி பிரார்த்திக்கப்படுகிறார்கள்.**

இங்ஙனம்,

காஞ்சீபுரம்,
*1—3—77.*

பிரதிவாதி பயங்கரம் செல்வமணி என்கிற
ரங்கநாத தாஸன்.



## களங்கம் தெளிவித்தல்

நாம் ஸமீபகாலத்தில் திருமங்கையாழ்வாருடைய ஆறு திவ்யப்பிரபந்தங்களுக்கும் நம்முடைய உரையை ஒரே ஸம்புடமாக அச்சிட்டு வெளியிட்டிருக்கிறோமென்பதைப் பெரும்பாலும் அனைவருமறிவர். அந்த ஸம்புடத்தில் திருக்குறுந்தாண்டகத்திற்கு அடுத்தபடியாகத் திருவெழுகூற்றிருக்கையையும் இரு திருமடல்களையும் வெளியிட்டு, சரமப்ரபந்தமான திருநெடுந்தாண்டகத்தை முடிவில் வெளியிட்டிருக்கின்றோம். திருநெடுந்தாண்டகம் திருமங்கை மன்னனுடைய திவ்யப்பிரபந்தங்களில் மட்டும் சரமமன்று; அருளிச்செயல்களெல்லாவற்றினுள்ளும் அதுவே சரமப்பிரபந்தமாகும். எம்பெருமானார் காலத்தில் அவதரித்த இராமாநுச நூற்றந்தாதியை முன்னோர்கள் நாலாயிரத்தினுள் சேர்த்து திருக்கார்த்திகை யநத்யயனத்தை அதற்கும் ஏற்படுத்தியிருந்தாலும் ஆழ்வார்களருளிய திவ்யப்ரபந்தங்களைப்பற்றிமட்டும் பேசுமளவில் திருநெடுந்தாண்டகமே சரமப்ரபந்தமென்பது

4

கன்னணழிவற்றது. பெரியவாச்சான்பிள்ளையருளிச்செய்த திருநெடுந்தாண்டக வியாக்கியானத்தின் அவதாரிகா ஸ்ரீஸூக்திகளை யேலே உதாஹரிப்போம்.

(சிலவாண்டுகட்குமுன்பு ஸ்பர்த்தையினால் சிலர் கல்பித்ததும், நவீனமே யென்று விபுலநிபுணநிருபணங்களினால் ஸ்தாபிக்கப்பெற்றதுமான ஒரு சுவடியில் கொண்ட விச்வாஸத்தினால் திருநெடுந்தாண்டகத்தை மூன்றாவது பிரபந்தமாகவும் பெரியதிருமடலை சரமப்பிரபந்தமாகவும் கொள்பவர்கள் சிலருளர்) அன்னவர்களின் வகுப்பில் சேர்ந்தவரான நம் ஸஹ்ருதயஸஹ்ருந்மணி, வித்வான், ஸ்ரீமதுராந்தகம், வீரராகவாசார்யஸ்வாமி (கோயிலில் வாழ்பவர்) நமக்கொரு ஸ்ரீமுகம் ஸாதித்தருளினார். அதிலுள்ள விஷயமாவது–உபதேசரத்தினமாலையில்–திருவாய்மொழிக்கு அவதரித்த வியாக்கியானங்கள் ஐந்தையும்பற்றி ஐந்து பாசுரங்கள் அருளிச்செய்தபின்பு, ஸகலப்பிரபந்தங்களுக்கும் வியாக்கியானமருளிச்செய்த பெருமையை யுடையரான பெரியவாச்சான்பிள்ளையைப்பற்றி அருளிச்செய்த பாசுரம்—"பெரியவாச்சான்பிள்ளை பின்புள்ளவைக்குந்தெரிய, வியாக்கியைகள் செய்வால்—அரியவருளிச்செயல்பொருளை ஆரியர்கட்கிப்போது, அருளிச்செயலாய்த்தறிந்து" என்பது. இப்பாசுரத்தின்வியாக்கியானத்தில் பிள்ளைலோகஞ்சீயர் —"திருவாய்மொழியை யொழிந்த திருப்பல்லாண்டு தொடங்கித் திருமடல்களீருகவுண்டான திவ்யப்ரபந்தங்கள் இருபத்து மூன்றுக்கும்......" என்றருளிச்செய்துள்ளார். இதில் "திருநெடுந்தாண்டகமீருக" என்றருளிச் செய்யாமல் 'திருமடல்களீருக" என்றருளிச்செய்திருக்கையாலே திருமடல்தான் சரமப்பிரபந்தமென்று தெரிவிக்கப்பட்டதாகிறது—என்று க்ரஹித்துவிட்டார் மதுராந்தகம் ஸஹ்ருந்மணி, அவர்க்குண்டானமருள்களில் இஃது ஒன்றுப; அல்லது தலைமைபெற்றதாப. அவர்க்கு அஸ்தாநேஉண்டான இக்கலக்கத்தைப்போக்கித தெளிவுபிறப்பிக்கிறோம்.

திவ்யப்பிரபந்தங்களுக்கு அவதாரக்ரமம் என்றும் அநுஸந்தானக்ரமம் என்றும் இரண்டு க்ரமங்கள் ப்ரஸித்தமாகவுண்டு. அவதாரக்ரமம்;—நான்கு திருவந்தாதிகள், திருச்சந்தவிருத்தம், திருவிருத்தம், திருவாசிரியம், பெரியதிருவந்தாதி, திருவாய்மொழி, கண்ணிநுண்சிறுத்தாம்பு, பெருமாள் திருமொழி, திருப்பல்லாண்டு, பெரியாழ்வார் திருமொழி, திருப்பாவை, நாச்சியார் திருமொழி, திருமாலை, திருப்பள்ளியெழுச்சி, அமலனாதிபிரான், பெரிய திருமொழி, திருக்குறுந்தாண்டகம், திருவெழுகூற்றிருக்கை, சிறிய பெரிய திருமடல்கள், திருநெடுந்தாண்டகம்—ஆகவிது திவ்யப்பிரபந்தங்களின் அவதாரக்ரமம். இனி அநுஸந்தானக்ரமமாவது (இதை நாம் விவரிக்கவேண்டியதில்லை. ஆனாலும் பலருமறிய விவரிக்கிறோம்.) திருப்பல்லாண்டு, பெரியாழ்வார் திருமொழி, திருப்பாவை, நாச்சியார் திருமொழி, பெருமாள் திருமொழி திருச்சந்தவிருத்தம், திருமாலை, திருப்பள்ளியெழுச்சி, அமலனாதிபிரான், கண்ணிநுண்சிறுத்தாம்பு, பெரியதிருமொழி, திருக்குறுந்தாண்டகம், திருநெடுந்தாண்டகம், திருவாய்மொழியாயிரம், முதல் திருவந்தாதி தொடங்கித் திருமடல்களளவும், ஆகவிது அநுஸந்தானக்ரமம், முடிவாக இராமானுசநூற்றந்தாதி அநுஸந்திக்கப்பட்டுவந்தாலும் அதற்குப் பெரியவாச்சான்பிள்ளையின் வியாக்கியான மில்லாமையாலும், ப்ரக்ருதத்தில் பெரியவாச்சான்பிள்ளையின் வியாக்கியானத்தைப்பற்றியே ப்ரஸ்தாவமாகையாலும் நூற்றந்தாதியை இங்கு மறந்திடுக.

ஆக, திவ்யப்ரபந்தங்களின் அவதாரக்ரமம்–முதல் திருவந்தாதி தொடங்கி திருநெடுந்தாண்டகமளவாக — என்றும், அவற்றின் அநுஸந்தானக்ரமம்—திருப்பல்லாண்டு தொடங்கித் திருமடலளவாக—என்றும் தேறிற்று. கீழே நாம் காட்டின அநுஸந்தானக்ரமம் எங்கும் ஸமரூபமாகவுள்ளது. வைகுண்ட ஏகாதசிக்கு முன்பத்துநாளும் பின்(10)பதினொருநாளும் நடைபெற்றுவரும் திருவத்யயநோத்ஸவத்தில் சுட்கூடாகக் காணலாம். விசேஷித்துத் திருவரங்கம் பெரிய கோயிலில் காணலாம். ப்ரக்ருதம் விவாதம் தொடங்கிய ஸ்வாமி கோயிலில் வாழ்பவராயினும் இந்த அநுஸந்தானக்ரமத்தைக் காண ப்ராப்தியற்றவராயினும் கேட்டுணரக் குறையில்லையே.

உபதேசரத்தினமாலை வியாக்கியானம் பணித்தவர் ''திருவந்தாதி தொடங்கித் திருமடலீறாகவுண்டான'' என்றருளிச் செய்யாமல் *திருப்பல்லாண்டுதொடங்கி என்றருளிச்செய்திருத்தலால், அவர் அவதாரக்ரமத்தைவிட்டு அநுஸந்தானக்ரமத்தையே கொண்டாரென்பது ஸ்பஷ்டமாயிற்று. இதை யாரும் இல்லை செய்யவில்லை. இந்தக்ரமத்தில் திருநெடுந்தாண்டகம் திருமங்கையாழ்வாருடைய பிரபந்தங்களில் சரமமாகவே தேறுமென்பது நிர்விவாதம். அநுஸந்தானக்ரமத்தில் திருமடலுக்கு சரமத்வமும், அவதாரக்ரமத்தில் திருநெடுந்தாண்டகத்திற்கு சரமத்வமும் ஜயபேரியுடன் தேறி நின்றது. மணவாளமாமுனிகள் உபதேசரத்தின மாலையில் *கோதிலவாமாழ்வார்கள் கூறுகலைக்கெல்லாம், ஆதி திருப்பல்லாண்டானதுவும்* என்னும் பாசுர மருளிச்செய்தது அவதாரக்ரமத்தைப்பற்றவன்றிக்கே அநுஸந்தானக்ரமத்தைப் பற்றவேயன்றோ. இதைப்பற்றி இன்னமும் விரித்துரைப்பது *ஸுசிரமூஷரே வர்ஷிதம்.*

திருநெடுந்தாண்டக வியாக்கியான அவதாரிகா ஸ்ரீஸூக்திகள் காணீர்:—
(பெரிய திருமொழிக்கும் திருக்குறுந்தாண்டகத்திற்கும் ஸங்கதியருளியபின்பு)

> ''பெரு விடாயர்க்குக் குடித்த தண்ணீர் ஆராதே மேன்மேலன விடாயைப் பிறப்பிக்குமாபோலே அது பழைய அபிநிவேசத்துக்கு உத்தம்பகமாய்த் திருவெழுகூற்றிருக்கையிலே *நின்னடியிணை பணிவன்வருமிடரகல மாற்றோவினையே* என்று ஆர்த்தராய்ச்சரணம்புக்கார். அநந்தரம் அபேக்ஷிதப் பெறுமையாலே கண்ணுஞ்சுழலையிட்டு—பெருமாள் முந்துறக்கடலை சரணம்புக்கு அவன் முகங்காட்டாவிட்டவாறே *சாபமாநய ஸௌமித்ரே!* என்று 'கொண்டு தாராய் தக்கானை' என்றாப்போலே வழியல்லாவழியே மடலூர்ந்து இரண்டு தலையையு மழித்தாகிலும் முகங்காட்டுவித்துக்கொள்வோமென்று மடலெடுக்கையிலே உபக்ரமித்தார். ........இனி முகங்காட்டாதொழியில் ஜகத்து அநீஶ்வரமாமென்று பார்த்து ப்ரஹ்லாதாதிகளுக்கு முகங்காட்டினாப்போலே..........தானும் இவரும் ஜகத்துமுண்டாம்படி பண்ணினான்.''

இந்த ஸ்ரீஸூக்திகளுக்குச் சேர திருமங்கையாழ்வாருடைய பிரபந்தங்களுக்குப் பௌர்வாபர்யம் கண்ணழிவற்றதென்று தெளிக.

நம்மாழ்வார் அவாவற்று வீடுபெற்றது திருவாய்மொழியின் முடிவில் தாமே ஸ்பஷ்டமாக அருளிச்செய்தது. திருமங்கையாழ்வார் தாம் பேறு பெற்றுத் தலைக்கட்டினது திருநெடுந்தாண்டகத்தின் முடிவில் "என்னில் அங்கமெல்லாம் வந்தின்பமெய்த எப்பொழுதும் நினைந்துருகியிருப்பன் நானே" என்று தாமே வெளியிட்டது. இங்ஙனன்றிக்கே மடலூர்வதோடு தலைக்கட்டினாரென்பவர்கள் ந நிரஸநீயா:;அபி து ஶோசநீயா:. தேசிகன் தாமருளிச்செய்த குருபரம்பராஸாரத்தில்—ஆளவந்தார் அருளிச்செய்தக்ரந்தங்கள் எட்டு என்று ஸாதித்து..."ஸ்தோத்ரமும் "சதுச்ச்லோகியும்" என்கிறார். சதுச்ச்லோகிபாஷ்யத்தின் முடிவில் சதுச்ச்லோகிக்குப் பிறகு ஸ்தோத்ரரத்நமென்று வ்யக்தமாக ஸாதிக்கிறார். அடுத்தபடியாக எம்பெருமானாருளிச் செய்த ஒன்பது க்ரந்தங்களை விவரிக்குமிடத்து "ஸ்ரீபாஷ்யம் தீபம் ஸாரம் வேதார்த்த ஸங்க்ரஹம்......" என்கிறார். ஸ்ரீபாஷ்யத்தில் வேதார்த்த ஸங்க்ரஹம் முந்துற அருளிச் செய்ததாக ஸுஸ்பஷ்டமநுக்ருஹீதம். இதையெல்லாம் மதுராந்தகம் ஸ்வாமிக்குப் பலகால் எடுத்துக்காட்டிமருளாயிருக்கிறோம். அடிக்கடி பாசிபடருகிறது. வேதார்த்த ஸங்க்ரஹம் ஸ்ரீபாஷ்யாதிகளுக்குப் பிற்பட்டதே யென்றும், சதுச்ச்லோகி ஸ்தோத்ரரத்நத்திற்குப் பிற்பட்டதேயென்றும் இவர் பிரவசனம் செய்து கொண்டிருக்கட்டும். மற்றுமொன்று; இவர் தாமெடுத்துக் காட்டிய உபதேசரத்தினமாலை வியாக்கியான வாக்கியத்தில் இருபத்துமூன்று ப்ரபந்தங்களென்றிருப்பதையும் இவர் எடுத்துக் காட்டுகிறார். திருவாய்மொழியைத் தவிர்த்து 23 காட்டவேணுமானால் திருப்பல்லாண்டைத் தனிப்பிரபந்தமாகப் பரிகணித்தே யாகவேணுமென்பதையும் இவர் அறிந்து திருப்பல்லாண்டு விஷயமான கலக்கமும் சமிக்கப்பெறவேணும்.

## உபநயன ஸம்ஸ்காரம்

— (சென்னை சங்கரமடத்தில் P. B. A. செய்த உபந்யாஸத்தின் சுருக்கம்) —

அந்தணர்களுக்கு நடைபெறும் ஸம்ஸ்காரங்களில் உபநயநமென்பது ஒன்று மிகமுக்கியமானது. ஸம்ஸ்காரமென பதற்கு நன்றாகச்செய்வது என்றுபொருள். ஒரு வஸ்துவை ஒரு காரியத்திற்கு யோக்யமாக்குதல் என்க. உபநயநமென்கிற ஸம்ஸ்காரமானது பாலர்களுக்கு வேதமோதுவதில் அதிகார ஸம்பத்தியை உண்டாக்குவதாதலால் இது ஸமஸ்காரமெனப்படுகிறது. பூணூல் தரிப்பதுதான் உபநயநமென்பது—என்று ஸாமான்ய ஜனங்கள் நினைக்கிறார்கள். உபநயநமென்கிற சொல்லுக்குப்பதிலாக பூணூல்போடுவது என்னுஞ் சொல்லைப் பலர் உபயோகித்து வருகிறார்கள். ப்ரஹ்மோபதேஶம் என்றும் வழங்கிவருகிறார்கள். இஃது ஒப்புக்கொள்ளத்தக்கதே. பூணூல் போடுவதென்பது உபநயந மென்கிற சொல்லுக்கு ஏற்ற பொருளல்ல. உப—ஸமீபத்தில் நயநம்—வைத்துக்கொள்ளுதல் என்பது இப்பதத்தின் பொருளாம். இச்சடங்கு நடைபெறும்போது ஆசாரியர் மாணவனைக் குறித்து "உப த்வா நேஷ்யே" என்று சொல்லுவர். இது முதலாக உன்னை நான் என்னிடத்திலேயே வைத்துக்கொள்வேன் என்பதுதான் இந்த ஆசார்ய வாக்கியத்தின் பொருளாகும்.

ஆபஸ்தம்ப மஹர்ஷியானவர் "உபநயநம் வித்யார்த்தஸ்ய ச்ருதிதஸ் ஸம்ஸ்கார:" என்றார். அதாவது வேதாத்யயநம் செய்யவபேக்ஷிப்பவனுக்கு வேதவிஹிதமான ஸம்ஸ்காரம் உபநயனம் என்றவாறு. இதனால் என்ன ஏற்படுகிறதென்றால், வேதாத்யயநம் செய்ய விருப்பமுள்ளவனுக்கு ஆசாரியரால் உபநயநம் செய்யப்படவேணும்; இதனால் மாணவனுக்கு வேதாத்யயநாதிகாரம் விளையும்—என்றதாக ஏற்படுகிறது. இப்படியானால் வேதாத்யயநம் செய்ய யோக்யதையற்ற ஊமையர் செவிடர் முதலியவர்களுக்கு உபநயநம் தேவையில்லையா? என்று கேள்வி பிறக்கின்றது. தேவையில்லையென்றே பல மஹர்ஷிகள் ஸித்தாந்தம் செய்திருக்கின்றார்கள். சிலர் மட்டும் யஜ்ஞோபவீததாரணம் செய்விக்க வேணுமென்கிறார்கள்.

ப்ராஹ்மணர், க்ஷத்ரியர், வைச்யர் என்ற மூன்று வருணத்தவர்களும் த்விஜர்கள், த்விஜாதிகள், த்விஜன்மாக்கள் எனப்படுவதால் வேதாத்யயநம் செய்ய அதிகாரம் பெற்றவர்கள். ஆனதுபற்றி இம்மூன்று வருணத்தவர்களுக்கும் உபநயந ஸம்ஸ்காரம் விதிக்கப்பட்டுள்ளது. உபநயநம் ஸம்ஸ்காரகர்மமென்று சொல்லப்பட்டபோதே ப்ரதான கருமமன்றென்பது விளங்கும். வேதாத்யயநமே ப்ரதாந கருமமாகக் கொள்ளத் தகும்.

முற்காலத்தில் க்ரமமான வயது வாய்ந்த பாலர்களைக் குருவின் ஸன்னிதானத்திலே கொண்டுபோய் விட்டுவிடுவர்கள். குருவானவர் அவனுக்கு உபநயந ஸம்ஸ்காரத்தைச் செய்து ஸாங்கமான வேதத்தை அத்யயநம் செய்விப்பர். அத்யயநம் முடிகிற வரையில் ப்ரஹ்மசாரியான பாலன் வீட்டுக்குப் போவதில்லை; குருகுலத்திலேயே வாஸம் செய்வான். குருசுச்ரூஷை செய்வது அவனுக்குப் பிரதானமான தருமம். பிக்ஷை யெடுத்துக் கிடைத்த அன்னத்தைக் குருவின் அநுமதி கொண்டு புஜிப்பான் வேதாத்யயநம் பூர்த்தியடைந்த பின்பு குரு தக்ஷிணை ஸமர்ப்பித்துக் குருவின் ஆஜ்ஞை பெற்றுத் தன்னில்லத்துக்குத் திரும்புவான்; அதன் பின்பு விவாஹம் நடைபெறும். இதெல்லாம் தற்காலம் எப்படி?

உபநயநம் ஸம்ஸ்கார கருமமென்றும், வேதாத்யயநமே ப்ரதாந கருமமென்றும் கீழே சொன்னதை மறுபடியும் நினைப்பூட்டுகிறோம். வேதாத்யயநம் செய்ய யோக்யதை பெறுவதற்காக உபநயநம் செய்யப்படுகிறது என்பதாகத் தேறிற்று. ப்ரதாந கருமமான வேதாத்யயநம் இல்லையென்றால் உபநயநமும் தேவையில்லை யென்று சொல்லலாம். ஆனால் இதை இக்காலத்தவர்கள் ஏற்றுக் கொள்வது சிரமம். "அஷ்டவர்ஷம் ப்ராஹ்மண முபநயீத: தம் அத்யாபயீத" என்கிற வசனம் ஏகாந்தமாக இல்லை யாவருமறிந்ததேயிது. ஏறக்குறைய நாற்பதைம்பது ஆண்டுகட்கு முன்வரையில் எட்டு வயதுள்ள குமாரனுக்கு உபநயநமும், எட்டு வயதுள்ள குமாரிக்கு விவாஹமும் வழுவாமல் நடைபெற்று வந்தது. சாரதா பில் என்று ஒன்று ஏற்பட்ட பிறகு குமாரிகளின் விவாஹம் வழுவுறத் தொடங்கிற்று. அந்த சாஸநத்தின்படி பதினன்கு வயதுக்குமேல் பெண்டிர்க்கு விவாஹம் செய்யத் தடையில்லாமலிருந்தும், அந்த சாஸனம் ஒரு வியாஜமாத்திரமாகி இருபது முப்பது வயது வரையிலுங்கூட விவாஹமாகாத பெண்களைப் பெரிய குடும்பங்களிலும்

பார்த்து வருகிறோம். வரன்கிடைக்கவில்லை என்பது யுச்தமான காரணம், படிப்பு முடியட்டுமென்றிருக்கிறோமென்று பலரும் சொல்லிவரக் காண்கிறோம். வதூ விவாஹ விஷயம் எப்படியாவது இருக்கட்டும்; இப்போது நாம் உபநயநத்தைப் பற்றியே ப்ரஸ்தாவிக்க வந்தோம். சார்தா பில் போன்ற சட்டம் உபநயநத்திற்கு யாதொன்றும் ஏற்பட்டிருக்க வில்லை. ஆயினும் இருபது வயதுக்கு மேலும் உப நயநமாகாத யுவாக்களை வைதிக லௌகிக விபாகமின்றிக்கே பல குடும்பங்களில் பார்த்துவருகிறோமென்பதில் விவாதமுண்டோ ?

முற்காலத்திலும் வேதாத்யயநம் செய்வதென்பதை ப்ராஹ்மண ஜாதியர்கள் யாவரும நியமமாக வைத்துக் கொண்டிருக்கவில்லை. எனினும், புருஷ ஸூக்தம் உபநிஷத்து முதலிய உபயுக்த பாகங்களையோதுவதை நியமமாகவே வைத்துக் கொண்டிருந்தார்கள். இக்காலத்தில் க்ஷத்ரிய வைச்யர்களை யொதுக்கி பிராமணர்களை மட்டும் தனியே யெடுத்துக் கொண்டாலும் வேதாத்யயநம் செய்கிற பிள்ளையோ உபயுக்தபாகங்களை மட்டும் ஓதுகிற பிள்ளையோ ஆயிரத்தில் ஒருவரிருவர் தேறுவதுமரிதே. உபநயந கலியாணம் மட்டும் ஆடம்பரமாக ஆயிரக்கணக்கான பணச் செலவில் நடைபெறுகிறது. முந்நூறு வருடங்களுக்கு முன்னம் தோன்றிய விச்வகுணதர்ஶமென்னும் நூலில் "உபநயநவிவாஹௌ உத்ஸவைக ப்ரதாநௌ" என்று சொல்லப்பட்டுள்ளது. இதன் பொருள் யாது? உபநயநமும் விவாஹமும் இக்காலத்தில் அவற்றின் பிரதானமான உத்தேசத்தை கவனிக்காமல் ஏதோ ஆடம்பரமாக நடத்தப்பட்டு வருகினறனவென்பதாம்.

இத்தகைய விஷயங்களைப் பற்றி இக்காலத்தில் நாம் ஸபைகளில் பேசுவதும், பத்ரிகைகளில் எழுதுவதும் ஒருவகையான பலனையும் தாராது என்பதை நாம் நன்கு அறிந்திருக்கச் செய்தேயும் ஏதோ பெரியோர்களின் கட்டளையினால் சிறிது பேசினபடி. ... ... ... ... ...

# குலசேகரப்பெருமாள் ஊனேறுசெல்வத் திருமொழியநுபவம்

குலசேகராழ்வாரருளிச்செய்த பெருமாள் திருமொழியில் நான்காவது பதிகத்தில் ரஸாநுபவம் செய்வோம் அப்பதிகம் ஊனேறுசெல்வம். "கொல்லிகாவலன் கூடல்நாயகன் கோழிக்கோன் குலசேகரன்" என்றும் "ராஜாநம் குலசேகரம்" என்றும் சக்ரவர்த்தியாகச் சிறந்த பிறவிபெற்ற இவ்வாழ்வார் "வானாளுஞ்செல்வமும் மண்ணரசும் யான் வேண்டேன்" என்று விண்ணுலகமண்ணுலகச் செல்வத்தை வெறுத்து "செம்பவளவாயான் திருவேங்கடமென்னும் எம்பெருமான் பொன்மலைமேல் ஏதேனுமாவேனே" என்று திருவேங்கட மலையோடு ஸம்பந்தமுடைய திர்யக்ஸ்தாவரஜன்மங்களில் ஏதேனுமொன்றாகப் பெறுவேனாகவேணுமென்று இத்திருமொழி முழுவதனாலும் அருளிச்செய்திருப்பது ஜன்மோத்கர்ஷாபகர்ஷவிஷயத்தில் சிறந்தசாஸ்த்ரார்த்தத்தைத் தெளிவிப்பதாகும். இத்திருமொழியினுள்ளே புகுந்து சிறிது ரஸாநுபவம் செய்யக் குதுகலிக்கின்றேன்.

1. முதற்பாட்டில் 'உடற்பிறவி யான்வேண்டேன்' என்று பிறவியை இகழ்ந்தவர்தாமே “குருகாய்ப்பிறப்பேனே” என்று பிறவியையே விரும்பினமையால் வேங்கடத்துக் கோனேரியில் பிறப்பது பிறப்பன்று. அது விரஜாநதியைச் சார்ந்து வைகுண்டத்தில் அப்ராக்ருதசரீரம்பூண்டு வாழ்வதோடொக்குமென்று ஆழ்வார் திருவுள்ளம்பற்றினரென்பது தெற்றென விளங்கும். [குருகாய்ப்பிறப்பேனே.] நாரை கொக்கு குருகு இவை ஒரே ஜாதி. நம்மாழ்வார் திருவாய்மொழியில் தூதுவிடும் பதிகங்களில் “அஞ்சிறையமடநாராய்” “வைகல்பூங்கழிவாய்வந்துமேயுங் குருகினங்காள்” “எங்கானலகங்கழிவாய் இரைதேர்ந்து இங்கினிதமரும் செங்கால மடநாராய்!” என்று முந்துறமுன்னம் தூதுபோக விளித்தது இதனையேயாதலால் “குருகாய்ப் பிறப்பேனே” என்று குருகான பிறவியிலே முதன்முன்னம் விருப்பங் காட்டினராழ்வார்.



2. [திருவேங்கடச்சுனையில் மீனாய்ப்பிறக்கும் விதியுடையேனாவேனே] கீழ்ப் பாட்டில் 'குருகாய்ப்பிறப்பேனே' என்றவர் அப்பிறவியில் ஓர் குறைதோன்றி மீனும் பிறவியை வேண்டுகின்றாரிப்பாட்டில். குருகுக்கு இறகுகள் உண்டாகை யாலே அது திருமலையைவிட்டுப் பறந்து வேற்றிடத்திற்குச் சென்றிடவுங்கூடும். திருமலையில் வாழவேணுமென்னுமாசை தமக்கு இப்போதிருப்பினும் குருகாய்ப் பிறந்தபோதும் இருக்குமென்ன முடியாதாதலால் அப்பிறவியில் குறை தோன் றிற்றென்க. மீனாய்ப் பிறந்தால் இடம்விட்டுப் பெயரமுடியாதன்றோ. 'குருகாய்ப் பிறப்பேனே' என்றதையும் 'மீனாய்ப்பிறப்பேனே' என்றதையும் சேர்த்து நோக்கு மிடத்து. மத்ஸ்யபக்ஷகமான குருகாய்ப்பிறத்தலோடு. அதற்கு இரையாகின்ற மீனாய்ப்பிறத்தலோடு இவர்க்கு வாசியில்லை—திருமலையில் ஏதேனுமொரு பிறப்பை விரும்புபவராதலால்—என்பது விளங்கும். எம்பெருமான் திருவுள்ளமுகந்து கொண்ட பல அவதாரங்களுள் முதலவதாரமாயிருத்தலும், நீர்மையுள்ளவிடத்தே செழித்து வளர்தலும், ஆதாரமான இடத்தைவிட்டுப் பிரிந்தால் உயிர்தரியாமை யும் முதலியன மீனினிடமுள்ள குணவிசேஷங்கள். “குருகாய்ப் பிறப்பேனே” என் றதுபோல் “மீனாய்ப்பிறப்பேனே” என்னாமல் “பிறக்கும் விதியுடையேனாவேனே” என்றது—இப்பொழுதே அங்கு யான் மீனாய்ப் பிறந்திடாவிடினும் என்றைக்கே னும் ஏதேனுமொரு நல்வினையால் அங்கு எனக்கு நேருமென்னும் நிச்சயமுண்டா னாலும் போதுமென்ற கருத்தைக் காட்டும். 

3 [வேங்கடக்கோன்தான் உமிழும்பொன்வட்டில் பிடித்துடனே புகப் பெறுவேனாவேனே] கீழ்ப்பாட்டில் விரும்பிய மீன் பிறவியிலும் ஒரு குறை தோன் றிற்று; நீரைவிட்டுப்பிரிந்தால் உயிர் தரித்திருக்கமாட்டாதது மீன் பிறவி; சுனை வற்றிப்போனால் மீனுக்கு ஸத்தையில்லையாம்; ஆகவே அப்பிறவியும் வேண்டா வென்று தோன்றி, திருமலையப்பனுக்கு அந்தரங்ககிங்கரனாய் அவர் வாய்நீர் உமி ழும் பொற்காளாஞ்சியை ஏந்திக்கொண்டு ஒருவராலும் தகையவொண்ணாதபடி துணிந்துவிரைந்து உள்ளேபுகுமவனும் பிறவிவாய்க்கவேணுமென்று அபேக்ஷிக்கிறார்.

4. [வேங்கடத்துச் செண்பகமாய் நிற்குந்திருவுடையேனாவேனே.] கீழ்ப் பாட்டில் விரும்பிய பொன்வட்டில் பிடிக்கும் கிங்கரனான பிறவியிலும் ஒரு குறை

தோன்றிற்று; ஒரு கைங்கர்ய பரனுபளவில் அறிந்துமறியாதும் நிகழ்கின்ற குற்றங் காரணமாகக் கோவிலதிகாரிகள் சினங்கொண்டு 'இன்ன குற்றத்திற்காக உன்னைக் கைங்கரியத்தினின்றும் விலக்கிவிட்டோம்' என்று கடிந்து விலக்கக்கூடும்; பொன் வட்டிலைக் களவு செய்ய ஆசை தோன்றி ராஜதண்டனைக்கு உட்பட நேர்ந்தாலும் நேரும்' என்று தோன்றிற்று. அதனால் அப்பிறவி யாசையைவிட்டு, அத்தகைய குற்றத்திற்கு இடமற்ற ஒரு ஸ்தாவரப்பிறவியை விரும்புகிறார். *வானவர் வானவர் கோனொடுஞ் சிந்துபூமகிழுந்திருவேங்கடப்* என்றபடி பரமபதத்திலுள்ளார் புஷ்பவர்ஷம் வர்ஷிக்குமிடமாதல்பற்றிப் புஷ்பமண்டபமெனப்படுகின்ற திருமலையிலே அப்பனுக்குப் புஷ்பகைங்கரியஞ்செய்வது விசேஷமாதலால் அக்கைங்கரியத்திற்கு உபயோகப்படுவதொரு பூமரமாக இருக்க வேண்டினாராயிற்று.

**5** [எழில் வேங்கட மலைமேல் தம்பகமாய்நிற்குந் தவமுடையேனவேனே] கீழ்ப்பாட்டில் சண்பகப்பிறவியை விரும்பிய ஆழ்வார்க்குப் புராணகதையொன்று நினைவுக்கு வந்தது: "கற்பகக் காவு கருதிய காதலிக்கு, இப்பொழுது ஈவனென்று இந்திரன் காவினில், நிற்பனசெய்து நிலாத்திகழ்முற்றத்துள் உய்த்தவன்* என்றும் *மட்டேறு கற்பகத்தை மாதர்க்காய் வண்துவரை நட்டான்* என்றும் ஆழ்வார்களருளிச்செய்கிறபடியே ஸத்யபாமைப் பிராட்டிக்காக தேவேந்திரனது சோலையினின்று கற்பகத்தரு பெயர்த்துக்கொண்டு போகப்பட்ட கதை; அங்ஙனம் யாரேனும் மஹாப்ரபுக்கள் திருமலைக்குவந்து சண்பகமரத்தின் சதிரைநோக்கி தேவஸ்தானத்தில் நிதிக்குவை செலுத்திப் பெயர்த்துக்கொண்டு செல்லக்கூடுமோ! என்று சங்கித்து அப்பிறவியை இகந்து, இலை காய் கனி நிழல் ஒன்றுக்குமுதவாததொரு மலட்டுமரமாய்ப் பிறக்கும் பிறவியை விரும்புகிறாராயிற்று. தம்பகப்—வீணே தோன்றி வளர்ந்து அங்கே தீந்து போவதொரு புதருமாம்.

**6** [*வேங்கடத்துள் அன்னனைய பொற்குவடாம் அருந்தவத்தனவேனே.] கீழ்ப்பாட்டில்—திருமலையில் சம்பகமாய் நிற்கஆசைப்பட்ட ஆழ்வார் அப்பிறவியிலும் குறைகண்டார்; அரசாங்கத்தார் மலையிலுள்ள செடி செட்டுகளை அடிக்கடி சோதிப்பவர்களாதலால் திடீரென்று அவர்கள் தம்பகத்தைக் களைந்தெறிந்திடக்கூடுமெனவும், அதுதானே விரைவில் தீந்தொழியக்கூடுமெனவும் சிந்தித்தார்; அக்குறைக்கு இடமில்லாமே அத்திருமலையில் ஒரு பெரியபாறையாக இருக்கப்பெற வேணுமென்று விரும்பினபடி. குவடு—சிறுகுன்று.

**7** [*திருவேங்கடமலைமேல் கானாறாய்ப்பாயுங் கருத்துடையேனவேனே.*] கீழ்ப்பாட்டில், திருமலையில் ஒரு பெரும் பாறையாகவிருக்க விரும்பியதிலும் ஒரு குறை தோன்றிற்று: நூதன ஆலயங்களில் மூலபிம்பம் அமைக்கப் பெரும் பாறையைத் தேடி வருமவர்கள் இதைக்கொண்டு ஒரு பௌத்த விக்ரஹமடித்துப் போட்டால் என்செய்வதென்று சிந்தித்தார். அப்படி உடைத்துக்கொண்டு போவதற்கு இடமறும்படி திருமலையில் கானாறாய்ப் பெருகவேணுமென்று பாரிக்கிறாரிதில்.

**8**. [*திருவேங்கடமலைமேல் நெறியாய்க்கிடக்கும் நிலையுடையேனவேனே*]. கீழ்ப்பாட்டில் கோலின கானாறுப்பிறப்பிலும் ஒரு குறையுணர்ந்தார்: கானாறு எப்

போதும் பெருகக்கூடியதல்றே: சில காலங்களில் வற்றிப்போமே: அப்போது திரு மலையில் வாழ்ச்சி இழந்ததாமே என நினைத்தார். அங்ஙனமன்றி எப்போதும் ஒரு தன்மைத்தாகத் திருவேங்கடமுடையானை ஸேவிக்க வருகின்ற பாகவதர்களின் ஸ்ரீ பாததூளிபடும்படி வழியாயிருக்கப் பெறவேணுமென்று பாரிக்கிருரிதில்.

9 [*படியாய்க்கிடந்துன் பவளவாய்காண்பேனே.*]வழியாய்க் கிடப்பதிலும் ஒரு குறை தோன்றிற்று. திருமலைக்குப் பல வழிகளுண்டு. சந்திரகிரிவழி அணித்தென்று அவ்வழியே போகக்கூடும். இப்போது வேறுவழியும் ஏற்பட்டுவிட்டதே. மேலும் வழியென்பது விலகிநிற்பதாதலாலும் அதையும்விட்டு, திருமலையப்பனுடைய திருவருள் நோக்கம் பதியுமாறு அவனதுகண்முகப்பிலே படியாயிருந்து, அதில் சைதன்யமும் குடிபுகுந்து பவளவாய்காணப் பெறுவேனாக வேணுமென்று பாரிக்கிருரிதில்.

10. [எம்பெருமான் பொன்மலைமேல் ஏதேனுமாவேனே.] நாம் கருங்கற் படியாய்க்கிடந்தால் திருவேங்கடமுடையானுடைய செல்வச் சிறப்புக்கு ஏற்ப அதன்மேல்ஸுவர்ணகவசத்தால் ஆவரணமேற்பட்டால்படியாகியும் பயனில்லையாமென்று கருதி, 'நானுமறியாமே அவன்றானுமறியாமே திருமலையில் ஏதேனுமொரு பிறப்பாகுக' என்று சாதுரியமாகப் பேசிப் பதிகத்தைத் தலைக்கட்டினுராயிற்று.

# நாம் மறந்ததை நினைவூட்டினுர் மஹான்

நேற்றைய தைமாதத்துப் பாதுகா பத்ரிகையில்; பிள்ளைலோகாசாரியர் வேதாந்தவாசிரியர்க்கு ப்ருத்யராயிருந்து ஸ்ரீரொன்று தூப்புல் தனியன் பணித்தாரென்று பிரசுரம் செய்திருந்ததை ஸ்ரீராமாநுஜன் 344ல் விமர்சித்தொழித்த நாம் ஸ்ரீராமாநுஜன் 281ல் பிரசுரித்திருந்ததையும் எடுத்துக்காட்ட மறந்துவிட்டோமென்று ஸ்ரீ உவே. ராவ்பஹதூர் S. ராகவையங்கார் ஸ்வாமி ஒரு நண்பர் மூலமாக நினைவூட்டினுர். அதை இங்கெடுத்துக்காட்டுகிறேன்.

"ஹைதராபாத் திருப்பாவை மலர்

ஹைதராபாத் மஹாநகரத்தில் ஸ்ரீ தேசிக ஸபையென்று ஒன்றுளது. அதைச்சேர்ந்த மஹநீயர்கள் நேற்று (1972) மார்கழியில் திருப்பாவை மஹோத்ஸவமொன்று நடத்தி திருப்பாவை மலரும் ஒன்று வெளியிட்டுள்ளார்கள். அதன் முகப்பில் Sri Desika Sabha. Thiruppavai Festival. ஸ்ரீ வில்லிபுத்தூராண்டாள் திருவுருவப்படம் Souvinir 1972 என்றுள்ளது. [இது அடையாளத்திற்காக எழுதினபடி] இந்த மலர் பதினுயிரக்கணக்கான ரூபாய் செலவில் ஏறக்குறைய 175 பக்கங்கள் கொண்டதாக ஆர்ட் பேபரிலேயே வெளியிடப்பட்டுள்ளது. அட்வர்டைஸ்மெண்டுகளே இதில் அதிகம். ஆனுலும் சில கட்டுரைகளுமுண்டு. ஸ்ரீமதஹோபிலமடமும் ஸ்ரீபரகாலமடமும் இதற்கு மங்களாசாஸனமளித்துள்ளது. இம்மலரில் வெளியிடுவதற்காகத் திருப்பாவை விஷயமான ஒரு கட்டுரையைத்

தெலுங்கு பாஷையில் எழுதியனுப்ப வேணுமென்று இச்சபையார் சில மாதங்களுக்கு முன்பு நம்மைப் பலகால் வேண்டினார்கள். "திருப்பாவையின் திருவவதாரம்" என்னும் பொருள்பற்றித் தெலுங்கு பாஷையில் நீண்டதோர் வியாஸம் அச்சபைக்கு அனுப்பினோம். அதை முகப்பில் வெளியிட்டுள்ளார்கள். "ஆண்டாளும் தேசிகனும்" என்கிற தமிழ் வியாஸம், ஸ்ரீ உவே. உத்தமூர் வீரராகவாசாரியருடையது முடிவில் வெளியிடப்பட்டுள்ளது. அதன் பிறகு சிற்சில ஆங்கில வியாஸங்களுமுள்ளன. உத்தமூர் வீரராகவாசார்ய ஸ்வாமியினுடைய கட்டுரையின் முடிவுரை என்னவென்றால்—

ஸ்ரீ தேசிகனின் பெருமையை ஸ்ரீலோகாசார்யர் பரக்கப் பேசியுள்ளார்; "சீரொன்று தூப்புல் திருவேங்கடமுடையான், பாரொன்றச் சொன்ன பழமொழியுள்—ஓரொன்றுதானே அமையாதோ தாரணியில் வாழ்வார்க்கு வானேறப் போமளவும் வாழ்வு."—ஸ்ரீவைஷ்ணவ குலதனமான இந்த ஸ்ரீஸூக்திகளை ஒவ்வொருவரும் தம் இல்லத்தில் வைத்துப் பாதுகாப்பது ஸ்ரீதேசிக பக்தர்களின் கடமையாகும்"—என்பதாம்.

இதைப்பற்றி அப்போது நாம் மூன்று பக்கங்களெழுதி யிருக்கிறோம். "இதைப்பற்றின தத்துவத்தை இவருக்குணர்த்தும் வியாஜத்திலுல் உலகுக்கெல்லா முணர்த்துவோம். ஸ்ரீதேசிகனுடைய பிரபாவத்தை ஆத்ய ப்ரஹ்மதந்த்ரஸ்வாமி ச்லோகரூபமாகவும் த்விதீய ப்ரஹ்மதந்த்ரஸ்வாமி தமிழ் வசனமாகவும் பணித்துள்ளார்கள். தமிழ் வசனமான வைபவம் "சென்னை அஸ்மத் தேசிகஸம்ப்ரதாயநிர்வாஹ ஸபை" என்கிற ஸபையின் மூலமாகச் சிலவாண்டுகட்கு முன்பு மறுபதிப்புச் செய்து வெளியிடப் பட்டுள்ளது. இது தேசிகன் எழுநூறாண்டு நிறைவுநினைவுமலர்களுள் ஒன்றெனத் தெரிகிறது. அது ஸம்ஸ்கிருத ஆங்கில பாஷைகளிலும் மொழிபெயர்த்து வெளியிடப்பட்டுள்ளது. அதில், ஆத்யப்ரஹ்மதந்த்ரஸ்வாமி பணித்த ச்லோகமாலிகைகளும் அங்கங்கே பலபல கையாளப்பட்டுள்ளன. தமிழ்ப் பாஷையிலுள்ள வைபவமே ஸாக்ஷாத் த்விதீய ப்ரஹ்மதந்த்ரஸ்வாமி பணித்ததாகையாலே ஸ்ரீலோகாசார்யர்க்கும் ஸ்ரீதேசிகனுக்குமுள்ள தொடர்பைப்பற்றி அந்த வைபவ நூல் தெரிவிக்கும் விஷயங்களை வரிசையாக எடுத்துக் காட்டுகிறோம். அதிலிருந்து 'சீரொன்று தூப்புல் திருவேங்கடமுடையானென்ற பாட்டின் விஷமத்தன்மை தெரியவருமென்று. அதில் பக்கம் 11-ல் 'தேசிகன் திருவரங்கம் சென்று சேரப் புறப்படுதல்" என்ற மகுடத்தின் கீழுள்ள த்விதீய ப்ரஹ்மதந்த்ர ஸ்வாமி ஸ்ரீஸூக்திகளிவை—[என்றிதற்கு மேலுள்ளதெல்லாம் நேற்று ஸ்ரீராமாநுஜன் (344ல்) விவரிக்கப்பட்டவையே. இதை நாம் முன்பு எடுத்தெழுதி யிருக்கவேணுமென்பது நினைவூட்டிய மஹானின் கருத்து. ... ... ... ...

## ஆசார்யஸூக்தியில் பாடவிகல்ப விமர்சம்.

(வித்வான்கள் விமர்சிக்கவேண்டிய விஷயம்)

ஸ்மிருதீதிஹாஸபுராணங்களிலும் மற்றும் பல வகைப்பட்ட நூல்களிலும் (பலபல பாஷைகளிலும்) பாடபேதங்கள் ஏற்படுவதென்பது ஸஹஜம். அச்சுக்

கூடங்கள் ஏற்பட்டபின்பு ஸ்ரீராமாயண மஹாபாரதாதிகளான ஸகல க்ரந்தங்களிலும் பெரும்பாலும் பக்கந்தோறும் கீழே மேற்கோள்களிட்டு, பத்தெட்டு பாடபேதங்கள்கூட அச்சிடப்பட்டிருப்பதைக் காணுகின்றோம். அவற்றுள் சில பாடபேதங்கள் ஆதரணீயங்களாயிருக்கும். (உதாஹரணமாக ஒன்றே காட்டுவோம்.) பகவத் கீதையில் "ஸஹயஜ்ஞா: ப்ரஜா:" என்பது ஶங்கரபாஷ்ய பாடம். "ஸஹயஜ்ஞை: ப்ரஜா:" என்பது பகவத் ராமாநுஜ பாஷ்ய பாடம். இங்ஙனே ஸஹஸ்ரநாமத்திலுமுள்ளது. இத்தகைய பாடபேதங்கள் ஒருவாறு பொருந்தக் கூடியனவாயிருந்தால் வைகல்பிகமாகக் கொள்ளத்தகும். பூருவர்களால் அப்படி கொள்ளப்பட்டுமுள்ளது. அச்சுப் பதிப்பில் காணப்படுகிறதென்கிற காரணத்தினாலேயே தவறான பாடபேதங்களை விவேகிகளான மஹான்கள் கொள்ளமாட்டார்கள். சில தாளகோஶங்களில் [ஏட்டுப் பிரதிகளில்] கண்டாலுங்கூட ஔசித்யமற்ற பாடங்களை மறுத்தே விடுகிறார்களன்றோ மஹான்கள். "ஸ ராஜ்யம் குருணா தத்தம்" என்கிற ரகுவம்ஶ ச்லோகத்தில் குருணா என்கிற ஸ்தானத்தில் பித்ருணா என்றும் பாடமுண்டு என்றாரொருவர். அப்படியுமிருக்கலாமென்றார் அது கேட்ட ஒருவர். 'அட முழு மூடமே!' என்றாரொருவர். இப்படி நூற்றுக்கணக்கான கதைகள் கேட்டிருப்பதுண்டு. மேகஸந்தேஶ காவியத்தில் "ஆஷாடஸ்ய ப்ரதமதிவஸே" என்கிற பாடம் ப்ரஸித்தமாக வழங்கிவருகிறது. 'ப்ரதமதிவஸே' என்பது கூடாது. (ப்ரஶமதிவஸே) என்றிருக்கவேணுமென்று மைஸூர் பரகால மடாஸ்தான வித்வான், ஸ்ரீமத். கஸ்தூரி ரங்காசார்ய ஸ்வாமி மிகமிகப் போராடினார். எழுபது வருஷங்களுக்குமுன் மஞ்ஜுபாஷிணீ பத்ரிகையில் "ப்ரஶமபாடதத்வம்" என்கிற அவருடைய நீண்ட வியாஸம் பிரசுரமாகியிருப்பது நினைவுக்கு வருகிறது. அவருக்கு எதிரியாய் நின்று மறுப்பெழுதினவர்கள் இருவர். "ஸ ராஜ்யம் பித்ருணா தத்தம்" என்றும் பாடமுண்டென்றால் சிரிப்பர்களேயொழிய இதில் வாதப்ரதிவாதம் நடைபெறாது. "கர்த்ருணா, கர்த்ரா" என்று இரண்டு ரூபமுமிருப்பது போலே "பித்ருணா, பித்ரா" என்று இரண்டு ரூபமுமுண்டே என்கிற மேதாவிகளும் "தேயே ஶதம் பித்ருணாய்" என்று ஓதுகிறோமே—என்பாரும் இல்லாமற் போகவில்லை.

இனி விவக்ஷிதத்தை விஜ்ஞாபிக்கிறேன். எண்பத்தாறுவது பிராயத்தின்முடிவிலிருக்குமடியேன் இருபத்து மூன்றுவது பிராயச் செய்தியொன்றை விஜ்ஞாபிக்கிறேன். அடியேன் ஸ்ரீமத் ப்ரதிவாதிபயங்கரம் (ஜகத்குரு) காதிஸ்வாமி அனந்தாசார்யஸ்வாமிஸன்னிதியில்ஸ்ரீபாஷ்யம்அதிகரித்துக்கொண்டிருக்கையில்பகல்வேளையில் அதிகரண ஸாராவளீ ப்ரவசனமும் ஸ்ரீஸ்வாமி செய்தருளிவந்தார். அதில் பதினைந்தாவது ச்லோகம் "வ்ருத்திக்ரந்தே து" என்பது. அதில் நான்காவது பாதத்தில் "நிர்வாஹஸ் தூபசாராத் க்வசிதிஹ கடதே" என்பதான பாடம் அக்காலத்துப் பதிப்பில் (சிந்தாமணி வ்யாக்யானஸஹித--தெலுங்கு லிபிப்பதிப்பில்) உள்ளது. இவ்விடத்தை ஸ்ரீஸ்வாமி ப்ரவசனம் செய்தருளுகையில் "ஸ்ரீமத் திருப்பதி புரிசை (மாமா) ஸ்வாமி 'இங்கு இஹ என்கிற பாடம் ஸர்வாத்மநா அஸங்கதமென்றும் (இதி) எனவிருக்கவேணுமென்றும் வல்புறுத்தி ஸாதிப்பர்' என்றார். தம்முடைய ஸ்ரீகோஶத்தில் திருத்தியும் வைத்துக்கொண்டிருந்தார். கீழண்ட

பக்கத்துத் திருமாளிகைக் காரரான நையாயிகரத்நம். ஸ்ரீமதுபயடவே இளங்காடு ரங்காசாரியர்ஸ்வாமி [அதிகரணஸாராவளியையும் தத்வ முக்தாகலாபத்தையும் வாசோவிதேயமாக்கிக் கண்டபாடம் செய்துதரித்திருக்கும் பஹான்] அப்போது உடனெழுந்தருளியிருந்தவர் "இஹபாடத்தைத்தான் அடியேன் சிந்தனை செய்திருக்கிறேனென்றார், அப்போது ஸ்ரீஸ்வாமி அந்தபாடம் அந்தபாடமேயென்பதைப் பரக்க உபபாதித்தருளினார். கீர்த்திமூர்த்தியான ஸ்ரீமத்திருப்புட்குழி ஸ்வாமியின் திருக்குமாரரான பட்டண்ணுஸ்வாமி ஸன்னிதிக்கு அவர் (இளங்காட்டு ஸ்வாமி) எழுந்தருளி ஸ்ரீ காதி ஸ்வாமியின் இந்த ஶோதனத்தை ப்ரஸ்தாவிக்க, 'இது நூதனமன்றே, இந்த பாடந்தான் அய்யா ஸாதித்துவந்ததென்று சொல்லி, தாம் திருத்திவைத்துக் கொண்டிருந்ததையுங் காட்டினாராம் விளக்கில் கொளுத்தின நீவட்டியென்று ப்ரஸித்தராயிருந்த பட்டண்ணு ஸ்வாமி.

இஃது இப்படியிருக்க, திருக்குடந்தையில் ப்ரபல பண்டிதோத்தமராக இருந்த ஸ்ரீஉவே (R. V.) ராயம்பேட்டை கிருஷ்ணமாசாரியர் ஸ்வாமி அதிகரண ஸாராவளியை வியாக்கியானத்தோடுக்ரந்தலிபியில் பதிப்பிக்கத்தொடங்கி மாஸிக ஸஞ்சிகையாக வெளியிட ஆரம்பித்தார். முதல் ஸஞ்சிகைநமக்குக்கிடைத்தது, இந்தத்திருத்தம் அதில் வந்திருக்கிறதாவென்று பார்க்கையில் அதில் இஹபாடமேயிருந்தது; இதியென்று திருத்தவில்லை. அந்த ஸ்வாமிக்கும் அடியேனுக்கும் இடையில் ஸம்பந்தபங்கமேற்பட்டு ப்ரபலவிரோதமுமுண்டாகியிருந்து பழையப்ரேமாதிஶயம் விஜ்ரும்பிதமாயிருந்த காலம் அது. அந்த ஸ்வாமிக்கு அப்போது அடியேன் எழுதினேன் "தேவரீருடைய உத்தமமான அதிகரண ஸாராவளிப் பதிப்பில்...... இஹ பாடம் திருத்தப்படவேணும்" என்று ஸ்வல்பவிவரணத்துடன். அதைக் கடாக்ஷித்த அந்த ஸ்வாமி நல்ல வ்யுத்பந்நராகையாலே உள்ளமும் உடலும் பூரித்து எவ்விதமான ப்ரதிவாதமும் பண்ணாமல் அப்போது திருக்குடந்தையில் ஶங்கரமடம் மூலமாக நடந்துகொண்டிருந்த ஆர்யதர்மமென்னும் வாரப்பத்திரிகையில் தமது ஸந்தோஷாதிஶயத்தை வாசாமகோசரமாகத் தெரிவித்து நீண்டதோர் வியாஸமெழுதி வெளியிட்டிருக்கிறார். இதி என்கிற திருத்தத்தை அடியேனுடையதாகவே எண்ணின அந்த ஸ்வாமி, அடியேனைப்பற்றி அளவுகடந்து புகழ்ந்து எழுதியிருக்கிறார் அந்த ஆர்யதர்மபத்ரிகையில். பிறகு அடியேன் அவர்க்கு இப்பாட விஷயமான பழைய கதையை விளக்கியெழுதினேன்.

அதன் பிறகு அடியேன் ஸ்ரீமத் வேதாந்த தேசிக க்ரந்தமாலை வெளியிட ஆரம்பித்து அதில் அதிகரண ஸாராவளியில் "இதிகடதே" என்கிற பாடத்தையே பாடாந்தரப்ரதர்ஶநமின்றி வெளியிட்டேன். அதற்குச் சில மாதங்கள் கழித்தபின் ஸ்ரீமதஹோபிலமடம் மூலமாக இரண்டு வியாக்கியானங்களுடன் தேவநாகர லிபியில் வெளிவந்துள்ள (மிகவழகிய பதிப்பான) அதிகரண ஸாராவளியிலும் இஹ பாடத்தை ஒரு மூலையிலும் காட்டாமல் இதி பாடமொன்றே பதிப்பிக்கப் பட்டுள்ளது. இதென்ன பெரிய விஷயமா? இஹ இருந்தாலென்ன? இதி யிருந்தாலென்ன? இரண்டும் அவ்யயம். "சைவ துஹி சைவ துஹி" போலே பாதபூரணார்த்தமே இடப்பட்டது. இதைப்பற்றி ஏதுக்கு இவ்வளவு பன்னியுரைத்தல்? என்று லகுவாக நினைப்பர் சிலர். "அப்திர் லங்கித ல்வ" என்னுங் கணக்கிலே பல

ஏடுகளைத் திருப்பினவர்கள் இப்படி நினைக்கக்கூடும். *ஸாரம் து ஸாரஸ்வதம் ஜாநீதே நிதராம் அஸௌ குருகுலக்லிஷ்ட:* என்னும்படிக்கு இலக்கானவர்கள் இதைச் சிறுவிஷயமாக ஒருபோதும் நினையார். [ராத்ரிரேவம் வ்யரம்ஸீத்—ராத்ரிரேவ வ்யரம்ஸீத். இத்யாதி.] **ஏவம். ஏவ** என்கிற இரண்டும் அவ்யயந்தான். ரஸிகர்களன்றோ வாசியறிவார். பண்டிதரென்று இறுமாந்திருப்பவர்களின் வ்யுத்பத்தியைப் பரீக்ஷிப்பதற்கு ஏற்ற இடமன்றோ இது. சகாரஸமர்த்தநம், துகாரஸமர்த்தநம் இத்யாதிகளை ஸ்மரிப்பது.

இஹபாடம் ஸர்வாத்மநா அஸங்கதமென்பதை நிரூபிக்கிறேன் கேண்மின்;- ப்ரக்ருத ச்லோகத்தில் மூன்றுவது பாதத்தில் (ந வயமிஹ முதா) என்று ஒருவிசை (இஹ)வந்துள்ளது. நான்காமடியில் அதற்கு புந. ப்ரயோகம் அநுசிதம். அநபேக்ஷிதம் அந்யாய்யம் அபஹாஸ்யம். இதிப்ரயோகத்திற்கு அத்யந்தம் ஆவச்யகதையுள்ளது குறிக்கொண்டிது கேண்மின்; *நிர்வாஹஸ்தூபசாராத் க்வசித்* என்பது ஒரு வாக்யமாக முடிந்துவிட்டது. * ஏகதாத்பர்யயோக: கடதே* என்பது ஒரு தனி வாக்கியமாக நிற்கிறது. முன்வாக்யத்திற்குப் பின்வாக்யத்தோடு எட்டடி ஸமந்வயம்? "க்வசித் ஔபசாரிகாத் நிர்வாஹாத் ஏகதாத்பர்யயோக: கடதே" என்று ஏகவாக்யமாகவே இங்கு ஸ்வாமி ஸாதித்திருந்தால் ஸமந்வயாபேக்ஷைக்கு அவகாசமேயிராது. ஏவஞ்ச, அதச்ச, என்கிற ஸ்தாநத்திலேயன்றோ இதி என்று ஸ்வாமி ப்ரயோகித்திருக்கிறார். இஹவுக்கு இங்கு என்ன வுபயோகம்? இதை இன்னமும் பன்னிப்பன்னி யுரைப்பது திஷ்டஹதமுத்கராபிகாதமாமத்தனை.

இந்த ப்ரஸ்தாவ விசேஷத்திற்கு ப்ரக்ருதத்தில் என்ன ப்ரஸக்தியென்னில். கேண்மின். தேவப்பெருமாள் ஸன்னிதியில் ஸமய விசேஷங்களில கூடும் பண்டித ஸமாஜத்தில் 20—2—77 அன்று அடியேனுக்குப் பரமாப்தரான ஒரு பண்டிதர் "உத்தமூர் வீரராகவாசாரியர் ஸ்வாமி அதிகாண ஸாராவளியை வியாக்கியானத்தோடு பதிப்பித்திருக்கிறுரே, தேவரீர் கடாக்ஷித்ததுண்டோ? என்று வினவினுர். பார்த்ததில்லையென்று சொல்லி, என்ன விசேஷமென்றேன். ஜீவ்ருத்திக்ரந்தேது என்கிற சுலோகத்தில் இதிபாடம. இஹ பாடம்—ஆகிற இரண்டையும் பதிப்பித்துள்ளார். இஹ பாடத்திற்கு உபபத்தியொன்றும் எழுதியிருப்பதாகத் தெரியவில்லையென்று சொல்லி, அந்த புஸ்தகத்தையும் கொணர்ந்து காட்டினுர். மிக வியப்பேயுண்டாயிற்று. அப்போது அவர்க்குச் சொன்னேன்;—இஹ பாடம் ஸர்வாத்மநா அஸங்கதமென்பது அவர்க்குத் தெரியாமையில்லை. ஆயினும், ப்ரதிவாதி பயங்கரரேரபஜ்ஞமாக வெளிவந்த இஹபாட வர்ஜநத்தை நாம ஏதுக்கு ஆதரிக்கவேணுமென்கிற விசாலவிமல ஹ்ருதயத்தினுலாயது இது—என்று விஜ்ஞாபித்துவிட்டு இதற்கு அநுபந்தமாகப் பழைய ஸமாசாரமொன்றைப் பரக்கச் சொன்னேன். அது மிகப்பழையதாகிவிட்டபடியால் இக்காலத்து வித்வான்களுக்கும் தெரிந்திருக்கட்டுமென்று சிறிது வெளியிடுகிறேனிங்கு. இடையில ஒரு பண்டிதர் சொன்னுர்—"அவர் பிராமாணிகர்; தமது கண்ணில் புலப்படும் பாடங்களை விடாமல் பதிப்பிக்க வேணுமென்கிற விரதமுடையவர், ஆனது பற்றியே இஹபாடத்தையும் காட்டிவைத்தார்" என்று. "ஸ்வாசார்யர் சோதித்து ஸ்தாபித்த பாடங்களையும்

த்ருணீகரித்து விட்டவர் காண்மின் அவர்'' என்று பரக்க உபபாதித்தேன். அதுவும் இங்கு மேலே விஸ்தமாகும். ஸ்ரீபாஷ்யோபக்ரமத்தில் ''ப்ரதிப்ரஸவஸம்பவாத்'' என்கிற பழையபாடம் 'ஸத்பாவாத்' என்று ஸோதிக்கப்பட்டது எம்முடைய பதிப்பு ஒன்றில்தான். அதுதான் இவர் தம்மாலும் ஆதரித்துப் பதிப்பிக்கப்பட்டது. ஸ்வாசார்யர் திருத்தவில்லை இதை. இங்கு பாடவிகல்பம் காட்டவில்லை இவர். இப்படி பல

இச்சிமாநகரில் ப்ரக்யாதராக எழுந்தருளியிருந்த ஸ்ரீமத் ப்ரஹ்ம் ஸேநாபதி. ஸ்ரீ கோழியாலம் ஸ்வாமி சிலபலவாண்டுகட்கு முன்பு பாடசோதனம் என்றொரு புத்தகத்தை வடமொழியில் எழுதி யச்சிட்டு வெளியிட்டிருந்தார். (அதன் விஷய மென்னவென்றால்) கீதாபாஷ்யம், ஸ்ரீபாஷ்யம் முதலான காலக்ஷேப க்ரந்தங்களில் சிலபல தவறுகள் ஓலையேடுகளிலுங்கூட சோதிக்கப்படாமல் ஏறி விட்டனவாகவும், அவற்றைத் தாம் பெரும்பாலும் தப்புடைய புத்திபலத்தாலே சோதிப்பதாகவும் காட்டி ''அது அப்படியிருக்கவேணும், இது இப்படியிருந்தால் நன்றாயிருக்கும்; அதை அப்படித் திருத்தலாமென்று தோன்றுகிறது. இதை இப்படித் திருத்தினாலொழியப் பொருந்தாது'' என்று இங்ஙனே பலபல வகையாகவெழுதி, நெடுங்காலமாகப் பெரியோர்கள் பேணிவந்த பாடங்கள் பலவற்றை சின்னபின்னமாக்கியிருந்தார். அது அடியேனுடைய பார்வைக்கு வந்தது. 'பல பெரியார்கள் பக்கலிலே இங்ஙனே பாடம் கேட்டிருக்கிறேன்'' என்றோ, ''தாளகோசங்களில் இங்ஙனே பாடம் காண்கிறது'' என்றோ அந்த ஸ்வாமி தெரிவித்திருந்தாராகில் உபேக்ஷித்திருக்கலாம். அப்படியல்லாமல், தாம் ஊஹிப்பதாகவும், தம்முடைய ஆலோசனையில் இப்படியிப்படி தோன்றுவதாகவுமே யெழுதியிருந்தபடியால் இதை விமர்சித்தேயாகவேணுமென்று தோன்றி, சிரமப்பட்டுப் பல ஸ்ரீகோசங்களை யாராய்ந்ததில் அந்த பாடசோதன க்ரந்தம் மறுக்கத்தக்கதே யென்று நிச்சயிக்கப்பட்டு ''பாடசோதந பரீக்ஷா'' என்கிற மறுப்பு நூலை விரிவாகவே யெழுதி வெளியிட்டேன். (1) ஸ்ரீபாஷ்யாதிகள் தெலுங்கு, க்ரந்தம், நாகரி ஆகிய மூன்று லிபிகளில் வெகுகாலமாகவேபதிப்பேறியிருப்பதால் அவற்றில் திருத்தப் பெற்றிருக்கிற பல பாடங்களைத் தாம் திருத்துவதுபோல் காட்டுகிறார்; (2) அவசியம் திருத்த வேண்டிய இடங்களைத் திருத்தாமலே விட்டிருக்கிறார்; (3) இவர் புதிதாகத் திருத்தியிருப்பவையெல்லாம் விபரீதங்கள்; ஒன்றுகூட ஏற்கத்தக்க திருத்தமன்று; ச்ருதப்ரகாசிகையை நோக்காமலே சில திருத்தங்கள் செய்திருக்கிறார்—என்று இவ்வகையில் விஷயங்களைக் கண்ணாடிபோல் எடுத்துக்காட்டி அவருடைய சோதனம் அப்ராமாணிகம் என்று முடித்திருந்தேன். அந்த பரீக்ஷாக்ரந்தம் வைதிக மநோஹரா மூலமாக உலகம் பரவியிருந்தது. [இது 1945-ஆம் வருஷத்தில்.]

இந்த க்ரந்த சர்ச்சை மறைந்து போகாதபடிக்கும், பண்டித வுலகுக்கு மறந்து போகாதபடிக்கும் தெய்வம் ஒரு பெரிய காரியம் ஆச்சரியமாகச் செய்வித்தது. (அதாவது) சிலபல வருடங்கள் கடந்தபின்பு இந்த உத்தமவித்வான் ஸ்ரீபாஷ்யத்தை ச்ருதப்ரகாசிகையோடு ஒரு பதிப்பும், தமது டிப்பணத்தோடு ஒருபதிப்புமாக இரண்டு பதிப்பு செய்தார். இவர் தாமாகச் செய்யவில்லை. ஸத்யம்! ஸத்யம்!! தைவம் செய்வித்தது. எதற்காக? அடியேனெழுதிய பாடசோதந பரீக்ஷாக்ரந்தத்திற்கு அற்புதமான வெற்றியை விளைவிப்பதற்காக. என்ன அற்புத வெற்றி

த்ருணீகரித்து விட்டவர் காண்மின் அவர்'' என்று பரக்க உபபாதித்தேன். அதுவும் இங்கு மேலே விஶதமாகும். ஸ்ரீபாஷ்யோபக்ரமத்தில் ''ப்ரதிப்ரஸவஸம்பவாத்'' என்கிற பழையபாடம் 'ஸத்பாவாத்' என்று ஶோதிக்கப்பட்டது எம்முடைய பதிப்பு ஒன்றில்தான். அதுதான் இவர்தமமாலும் ஆதரித்துப் பதிப்பிக்கப்பட்டது. ஸ்வாசார்யர் திருத்தவில்லைஇதை. இங்கு பாடவிகல்பம் காட்டவில்லை இவர். இப்படி பல

இக்கச்சிமாநகரில் ப்ரக்க்யாதராக எழுந்தருளியிருந்த ஸ்ரீமத் ப்ரஹ்ம ஸேத்யாதி. ஸ்ரீ கோழியாலம் ஸ்வாமி சிலபலவாண்டுகட்கு முன்பு பாடஶோதனம் என்றொரு புத்தகத்தை வடமொழியில் எழுதி யச்சிட்டு வெளியிட்டிருந்தார். (அதன் விஷயமென்னவென்றால்) கீதாபாஷ்யம், ஸ்ரீபாஷ்யம் முதலான காலக்ஷேப க்ரந்தங்களில் சிலபல தவறுகள் ஓலையேடுகளிலுங்கூட சோதிக்கப்படாமல் ஏறி விட்டனவாகவும், அவற்றைத் தாம் பெரும்பாலும் தம்முடைய புத்திபலத்தாலே சோதிப்பதாகவும் காட்டி ''அது அப்படியிருக்கவேணும், இது இப்படியிருந்தால் நன்றாயிருக்கும்: அதை அப்படித் திருத்தலாமென்று தோன்றுகிறது. இதை இப்படித் திருத்தினாலொழியப் பொருந்தாது'' என்று இங்ஙனே பலபல வகையாகவெழுதி, நெடுங்காலமாகப் பெரியோர்கள் பேணிவந்த பாடங்கள் பலவற்றை சின்னபின்னமாக்கியிருந்தார். அது அடியேனுடைய பார்வைக்கு வந்தது. 'பல பெரியார்கள் பக்கலிலே இங்ஙனே பாடம் கேட்டிருக்கிறேன்'' என்றோ, ''தாளகோசங்களில் இங்ஙனே பாடம் காண்கிறது'' என்றோ அந்த ஸ்வாமி தெரிவித்திருந்தாராகில் உபேக்ஷித்திருக்கலாம். அப்படியல்லாமல், தாம் ஊஹிப்பதாகவும், தம்முடைய ஆலோசனையில் இப்படியிப்படி தோன்றுவதாகவுமே யெழுதியிருந்தபடியால் இதை விமர்சித்தேயாகவேணுமென்று தோன்றி, சிரமப்பட்டுப் பல ஸ்ரீகோசங்களை யாராய்ந்ததில் அந்த பாடசோதன க்ரந்தம் மறுக்கத்தக்கதே யென்று நிச்சயிக்கப்பட்டு ''பாடசோதந பரீக்ஷா'' என்கிற மறுப்பு நூலை விரிவாகவே யெழுதி வெளியிட்டேன். (1) ஸ்ரீபாஷ்யாதிகள் தெலுங்கு, க்ரந்தம், நாகரி ஆகிய மூன்று லிபிகளில் வெகுகாலமாகவேபதிப்பேறியிருப்பதால் அவற்றில் திருத்தப் பெற்றிருக்கிற பல பாடங்களைத் தாம் திருத்துவதுபோல் காட்டுகிறார்; (2) அவசியம் திருத்த வேண்டிய இடங்களைத் திருத்தாமலே விட்டிருக்கிறார்; (3) இவர் புதிதாகத் திருத்தியிருப்பவையெல்லாம் விபரீதங்கள்; ஒன்றுகூட ஏற்கத்தக்க திருத்தமன்று; ச்ருதப்ரகாசிகையை நோக்காமலே சில திருத்தங்கள் செய்திருக்கிறார்—என்று இவ்வகையில் விஷயங்களைக் கண்ணாடிபோல் எடுத்துக்காட்டி அவருடைய சோதனம் அப்ராமாணிகம் என்று முடித்திருந்தேன். அந்த பரீக்ஷாக்ரந்தம் வைதிக மநோஹரா மூலமாக உலகம் பரவியிருந்தது. [இது 1945-ஆம் வருஷத்தில்.]

இந்த க்ரந்த சர்ச்சை மறைந்து போகாதபடிக்கும், பண்டித வுலகுக்கு மறந்து போகாதபடிக்கும் தெய்வம் ஒரு பெரிய காரியம் ஆச்சரியமாகச் செய்வித்தது. (அதாவது) சிலபல வருடங்கள் கடந்தபின்பு இந்த உத்தமூர்வித்வான் ஸ்ரீபாஷ்யத்தை ச்ருதப்ரகாசிகையோடு ஒரு பதிப்பும், தமது டிப்பணத்தோடு ஒருபதிப்புமாக இரண்டு பதிப்பு செய்தார். இவர் தாமாகச் செய்யவில்லை. ஸத்யம்! ஸத்யம்!! தைவம் செய்வித்தது. எதற்காக? அடியேனெழுதிய பாடசோதந பரீக்ஷாக்ரந்தத்திற்கு அற்புதமான வெற்றியை விளைவிப்பதற்காக. என்ன அற்புத வெற்றி

யென்று கேளுங்கள். ஆசார்யர் (சோதித்த) திருத்தின பாடங்களை சிஷ்யர் பரிபாலிக்க வேண்டாவா? பரிபாலித்திருப்பதுண்டாவென்று பாருங்கள். பாட சோதந பரீக்ஷையில் நான் கண்டித்து ஸ்தாபித்த பாடங்களைத்தான் இவர் பதிப்பித்துள்ளார். (வெண்பா) "அண்ணங்கராசிரியர் ஆய்ந்துரைத்த நூல்களெலாம், கண்ணுங் கருத்துமாய்க் காண்பார்தாம்—திண்ணம், மருளெல்லாம் மாய்ந்து மயக்கெல்லாம் தீர்ந்து, தெருளுற்று வாழ்வர் சிறந்து." என்று ஸேதுபதி ஸம்ஸ்தான மஹாவித்வான். ரா. ராகவய்யங்கார் ஸ்வாமி பிரசுரித்திருப்பது பழுதாகுமோ?

ப்ரக்ருத விஷயம் பண்டிதர்களின் உள்ளத்தில் நன்கு பதியுமாறு ஒரு ஸம்பாஷணையைக் கல்பித்து வெளியிடுகிறேனிங்கு. (அதாவது) அடியேனுக்கும் உத்தமூர் பண்டிதர்க்கும் வினாவிடைகள் நடப்பதாக வைத்து விஷயங்களை நன்கு விளக்குகிறேன். (அடியேனுடைய பாடசோதந பரீக்ஷை வெளிவந்தவுடனே தேவப்பெருமாள் ஸந்நிதி நூற்றுக்கால் மண்டபத்தில் கூடின பண்டித பரிஷத்தினால் அந்த நமது நூலுக்குப் பெறுவிக்கப்பட்ட வெற்றி ஸாமான்யமானதல்ல) மேல்வரும் ஸம்பாஷணையை உற்றுநோக்குமின். ஸ்தாலீபுலாகந்யாயேந காட்டுகிறேன்.

1. அந்தரத்வாதிகரண ஸ்ரீ பாஷ்யத்தில் "ந ச த்வயோரநயோ?." என்று தொடங்கும் வாக்கியத்தில் (த்வயோ:) என்கிற பதம் இருமுறை விழுந்திருப்பது பிசகென்றும், அது ஒருமுறைதானிருக்கத் தக்கதென்றும், மற்றொரு முறையிருப்பதை அடித்துவிடவேணுமென்றும் கோழியாலம் ஸ்வாமியின் பாடசோதனத்தில் இருக்கிறதே. அதை என்ன பண்ணினீர்? அடித்துவிட்டீரா? என்று வினவினால். அங்கு ச்ருதப்ரகாசிகையில் (த்வயோ:) என்பது இருமுறை யிருப்பதை நிலைநாட்டி, ஒன்று வாக்யபரமென்றும் மற்றொன்று உபாஸநபரமென்றும் விவரித்திருப்பதாக தேவரீர் பரீக்ஷாக்ரந்தத்தில் மறுவாய்திறக்க வழியில்லாதபடி நிரூபித்திருப்பதனால் கோழியாலம் ஸ்வாமி திருத்தியது தவறென்று துணிந்து, தேவரீர் நிலைநாட்டியபடியேதான் அச்சிட்டிருக்கிறேன். வேறு நான் என்னபண்ணமுடியும்? என்று தானே தேவரீர் விடையளிக்க நேரும். (உ.) ஸந்தேஹமென்ன? வேறு என்ன விடையளிக்க முடியும்? ப்ரத்யக்ஷாபலாபம் பண்ண முடியுமோ?

2. தக்ஷிணாயநாதிகரண ஸ்ரீபாஷ்யத்தில் "ப்ரஹ்ம ப்ரபித்ஸத:" என்றிருப்பது வியாகரண விருத்தமென்றும், (ப்ரபித்ஸத:) என்றதை (ப்ரபித்ஸமாநஸ்ய) என்றாவது (ப்ரபித்ஸோ:) என்றாவது திருத்தவேண்டுமென்றும் எழுதியிருந்தாரே, அங்கு என்ன செய்தீர்? என வினவினால்—இப்படி ஸ்வேச்சையாகத் திருத்துவது ஸாஹஸமென்றும், திருத்தவேண்டுவது அவசியமானால் (ப்ரபித்ஸத:) என்பதை (ப்ரேப்ஸத:)என்று திருத்துவதுதான் பொருத்தமென்றும் உபபத்தியோடு தேவரீர் எழுதியிருந்தபடியால் அதுதான் மிகவும் யுக்தமென்று கொண்டு அப்படியே அச்சிட்டேன் என்று தானே தேவரீர் ஸாதிக்கவேணும். (உ.) ஆமாம். ஸந்தேஹமென்ன?

3 ஈக்ஷதிகர்மாதிகரண ஸ்ரீபாஷ்யத்தில் "ஈக்ஷிது: ஸ்தாநதயா நிர்திஷ்ட" என்றவிடத்தில் (ஈக்ஷிது:) என்பது அந்வயிக்கமாட்டாதென்றும் (ஈக்ஷிதஸ்தாந

தயா) என்று திருத்தியே யாகவேண்டுமென்றும் (தத்ஸ்தாநதயா) என்றுவது திருத்தியாக வேண்டுமென்றும் சோழியாலம் ஸ்வாமி எழுதியிருந்தாரே, அப்படியே திருத்தினீரா? என்று கேட்டால்; இங்கு ஸ்வாமி ஏதோ மருண்டுவிட்டாரென்றும், மறுபடியும் ஸ்ரீபாஷ்ய பங்க்திகளை ஸேவித்தால் தெளிவு பிறக்குமென்றும், (ரக்ஷிது:) என்றுதானிருக்கவேணுமென்றும் தேவரீர் நன்கு விளக்கியிருப்பதனால் உண்மையில் இங்கு ஸ்வாமி ப்ரமித்துவிட்டதாகவே தெரியவந்தபடியால் சோழியாலம் ஸ்வாமி திருத்தின பாடத்தை உபேக்ஷிக்கவே நேர்ந்துவிட்டது என்றுதானே தேவரீர் ஸாதித்தாகும். (உ.) வெறுமனேயா? மேளதாளத்துடன் சொல்வேன்.



4. இந்த்ரப்ராணாதிகரண ஸ்ரீபாஷ்யத்தில் உதாத்தமான ॥த்வமேவ மேவரம் வ்ருணீஷ்வ யம் த்வம் மநுஷ்யாய ஹிததமம் மந்யஸே॥ என்கிற ச்ருதிவாக்யத்தில் (த்வமேவ) என்பதை (தமேவ) என்று திருத்தவேணுமென்று ஸுப்ரஸித்தரான ஓர் ஆசாரியர் உபதேசித்ததாக தேவரீருடைய ஆசார்யர் எழுதியிருக்கிறாரே அதை அப்படியே திருத்திற்று? என்று கேட்டால், அந்தோ! எப்படித் திருத்த முடியும்? மேலே (யம்) என்றிருப்பதற்குச்சேர, முன்னே (தம்) என்றிருக்கவேணுமென்று அஸ்மதாசார்ய ஸ்வாமி நினைத்துவிட்டார்; அது பிசகென்று தேவரீர் வெகுயுக்தமாக நிரூபித்திருப்பதால் இதுவே சிறந்த ஆசார்யோபதேசமென்று கொண்டேன். இது ச்ருதிவாக்யமென்பதை ஸ்வாமி சிந்தியாமற்போனார். திருத்துவது ஆத்மஸம்ரக்ஷ்யத்திற்கு ஒவ்வாததோடு அபவாதத்திற்கும் ஹேதுவாகுமென்று விட்டுவிட்டேன். என்றுதானேதேவரீர்பணிக்கவேண்டும் (உ)வேறுவழிஏது?



5 ப்ரயோஜநவத்த்வாதிகரணத்தில் "வைஷம்யநைர்க்ருண்யே ந ஸாபேக்ஷத்வாதித்யாதி ஸூத்ர ஸ்ரீ பாஷ்யத்தில் ஐந்தாறு பங்க்திகளுக்குப் பிறகு "தத்ரோத்தரம்—ந ஸாபேக்ஷத்வாத் இதி" என்றுள்ள ஸ்ரீஸூக்தியை அங்கிருந்து பெயர்த்து ஸூத்ரத்திற்குமுன்னே கொண்டு தள்ளவேணுமென்று உமதாசிரியர் எழுதியிருந்தாரே, அப்படியே தள்ளினீரா? என்று கேட்டால், தள்ளினதுண்டு; ஸ்ரீபாஷ்யஸூக்தியைத் தள்ளவில்லை; அஸ்மதாசார்யோக்தியைத்தான் தள்ள நேர்ந்தது. பரீக்ஷையில் தேவரீர் எழுதிய மறுப்பு மறுக்கமுடியாமலிருப்பதனால். ஆசார்யருடைய திருத்தத்தைக்கொள்ள முடியவில்லையே யென்றுதானே தேவரீர் ஸாதிக்கவேணும். (உ) வேறு வழி ஏது? அப்படித்தான் சொல்லியாகவேணும்.

6. ஸம்பந்தாதிகரணத்தில் "ப்ருஹதாரண்யகே ச்ரூயதே" என்று ஸ்ரீபாஷ்யோபக்ரமமிருப்பதில் "ச்ரூயதே" என்கிற க்ரியாபதம் அநந்விதமாகையால் அதைத் தூக்கியெறிய வேண்டியதென்று சோழியாலம் ஸ்வாமியெழுதியிருக்கிறாரே, அதைத் தூக்கியெறிந்தீரா? என்று கேட்டால், ஸ்வாமி யெழுந்தருளியிருந்தால் அவரைத் தூக்கியெறியலாம்; அந்த அபசாரம் நேராதது பரமபாக்யம். அவருடைய உக்தியைத்தான் தூக்கியெறியவேண்டும்படி தேவரீருடைய நிருபணமிருந்தது. என் செய்வேன்? ஆசார்யோக்தி திரஸ்காரபாபம் அபரிஹார்யமாயிற்று—என்றுதானே தேவரீர் ஸாதித்தருளவேணும். (உ) சாந்தம் பாபம் சாந்தம் பாபம்! ஹந்த! பலவதீ பவிதவ்யதா!

7. ரசநாநுபபத்தி திகரணத்தில் 'விப்ரதிஷேதாச்ச' என்கிற ஸூத்ர ஸ்ரீ பாஷ்யத்தில் "பந்தமோக்ஷ வ்யவஸ்தநாநுஷ்டாநம் பேஷ்யஞ்ச ப்ரக்ருதேரேவ—இத்யாஹ..." என்றிருப்பதில் 'இங்கு இதிபதம் இருக்கத் தகாதென்று நிச்சயமாய்ச் சொல்லுவேன்; த்விதீயையிருக்குமிடத்தில் அது இருக்கக்கூடாதாகையால்' என்று கோழியாலம் ஸ்வாமி எழுதியிருக்கிறாரே; அந்த இதியைவெடுத்தெறிந்து விட்டீரா? என்று வினவினால் யதியிருந்தால் ஒருவாறு எடுத்தெறியலாம்; இதியின் உபபத்தியை தேவரீர் வெகு ஸமஞ்ஜஸமாக நிரூபித்திருப்பதனால் தெளிவுற்றேன். "அத்ர இதிபதம் ந ஸ்யாதிவ" என்றெழுதியிருக்கலாம் ஸ்வாமி; "ந ஸ்யாதிதி நிச்சியதே" என்றெழுதினது அவஜ்ஞயாய்விட்டது. இங்கு தேவரீருடைய நிருபணம் அதிமநோஹரம்—என்றுதானே தேவரீர் ஸாதித்தாகும்...ஆம் ஆம் ஆம்.

8. 'விப்ரதிஷேதாச்சாஸமஞ்ஜஸம்' என்கிற அந்த ஸூத்ர பாஷ்யத்திலேயே 'ஸந்நிதே: அகிஞ்சித்கரத்வம்' என்றிருப்பதை அகிஞ்சித்ருபத்வமென்று திருத்தவேணுமென்று நிச்சயமாகச் சொல்லுவேனென்று கோழியாலம் ஸ்வாமியெழுதியிருக்கிறாரே; இந்த நிச்சயத்தையாவது நிலைநாட்டினீரா? என்று கேட்டால்—எந்த நிச்சயமும் காகக்குதவாததாயிற்றே. அதைப் பாடாந்தரமாகப் போடவுங்கூட நெஞ்சாலும் நினைக்கமுடியாதபடியன்றோ தேவரீர் வரைந்திருக்கிறது—என்று தேவரீர் ஸாதித்தாகுமல்லவா? (உ.) தடையென்ன? வேறுகதிஏது?

9. ஸஹகார்யந்தரவித்யதிகரணத்தில் ஸித்தாந்தத்தில் "ச்ரவணமநநாப்யாம் ப்ராப்தம்வேதநம் ப்ரதிலப்ய இத்யர்த்த:"என்றவிடத்துப்ராப்தம் என்றதை அப்ராப்தமென்று பெரியார்களின் உபதேசத்தைக் கொண்டு அடியேன் திருத்தியிருந்தேனே; பாவப்ரகாசிகையில் ப்ராப்தம் என்கிற பாடம் ஆதரிக்கப்பட்டிருப்பதைக்கொண்டு கோழியாலம் ஸ்வாமி "ப்ராப்தமென்றிருந்தாலும் அப்ராப்தமென்றிருந்தாலும் உபய பாடத்தையும் நிர்வஹிக்கக் குறையில்லை" என்றெழுதியிருந்தாரே. அங்கு என் செய்தீர்? என்று கேட்டால், என்ன செய்ய முடியும்? ஆசார்யாபிப்ராயரக்ஷணம் அப்ராப்தமென்று முடித்தேன். தேவரீருடைய நிருபணம் அசைக்கமுடியாமலன்றோ இருக்கிறது.என்றுதானே தேவரீர் ஸாதித்தாகும். (உ.)ஸாதிக்கஎன்ன இருக்கிறது?உபநயனத்திற்போல்.பாடம்பாடம்என்பதேபாடம்

10. ஸ்வாசார்யர் காட்டின திருத்தங்களை உபேக்ஷித்ததுபோல அடியேன் காட்டின திருத்தங்களையும் உபேக்ஷித்ததுண்டோ? என்று கேட்டால், அது எப்படி முடியும்? 'தத்ர ஸ்ரீர் விஜயோ பூதிர் த்ருவா நீதிர் மதிர் மம' என்று அடியேன் விஜ்ஞாபிக்கவேணுமோ? என்று தேவரீர் ஸாதித்தாகுமன்றோ? (உ.) ஏனுகாது?

நிகமனம்:—ஆரியர்காள்! இந்த விஷய விசாரம் ஆந்தராளிக ஸம்ப்ரதாய சர்ச்சையில் சேர்ந்ததன்று. [தென்கலை வடகலை விவாதத்தில் சேர்ந்ததன்று] மடமுநித்ரய விவாதத்திலும் சேர்ந்ததன்று. அதிகரணஸாராவளீ பாடவிமர்சமும் அப்படியே. வித்யாபரிச்ராந்தர்களான எவரும் இதை ஆராய்ச்சி செய்யலாம்.

எதிர்பாராத ஒருமஹாபாக்யம். மதுராந்தகத்திலெழுந்தருளியிருக்கும் சாக்ஷாத் பதஞ்ஜலியான ஸ்ரீமதுபயவே. பாதூர். ராகவாசாரியர் ஸ்வாமி நேற்று 26-3-76 மாலை யாத்ருச்சிகமாக இவ்விடமெழுந்தருளி இக்கட்டுரையைப் பூர்த்தியாகக் கடாக்ஷித்தருளி ஸர்வம் ஸமஞ்ஜஸமென்று ஸாதித்து உகந்தார். மேலும்இதற்கு இது விருத்தமென்றே பெயரிடவாமே என்றும் ஸாதித்தார். ... ... •